

# வைணவ புராணங்கள்

பேராசிரியர் முனைவர்

## ந சுப்பு ரெட்டியார்



1916 2016

ந சுப்பு ரெட்டியார் 100

*Centenary Committee Publications*

எளிமை, இனிமை, தெளிவு இவர்தம் நூல்களின் தனிச்சிறப்புகளாகும்.

# வைணவ புராணங்கள்

பேராசிரியர் முனைவர் **ந சுப்பு ரெட்டியார்**



எளிய வேளாண் குடியில் பிறந்து, தன் முயற்சியால் பயின்று,
ஆசிரியராக தொடங்கிப் பேராசிரியர் வரை உயர்ந்தவர்.
திருப்பதி திருவேங்கடவன் பல்கலைக்கழகத்தில் தமிழ்த்துறையை
உருவாக்கி அதன் தலைவராகப் பணியாற்றியவர்.
பல பல்கலைக்கழகங்களில்
சிறப்புநிலைப் பேராசிரியராகத் திகழ்ந்தவர்.

பண்டையத் தமிழ்க்கல்வி மரபில் வேரூன்றி,
நவீனக் கல்விப் பயிற்றல் முறைகளில் தேர்ந்தவர்.
பல ஆய்வாளர்களை உருவாக்கியவர்.
வாழ்நாள் முழுவதும் எழுத்தும், பேச்சுமாக வாழ்ந்தவர்.
136 [135 +1] நூல்களைப் படைத்துப் பன்முக ஆளுமையாக மிளிர்ந்தவர்.

அன்னாரின் நூற்றாண்டு (2015-2016)
108 நிகழ்வுகளாக தமிழகமெங்கும்
மிகச் சிறப்பாக கொண்டாடப் பெற்றது.

இந்நூலில் இதிகாச பாகவதம், புராண பாகவதம், திருக்குருகை மான்மியம், கூடற்புராணம், இரு சமய விளக்கம் எனும் ஐந்து நூல்களைப் பற்றிய ஒருநிலையான ஆய்வுகள் உள்ளன. புராணங்கள் பல்வேறு மதங்களில் எப்படியெல்லாம் உள்ளன என்பன போன்ற செய்திகளை உடலுக்கு ஒரு முகம் போல் விளக்குகின்றார் பேராசிரியர்.

**ந சுப்பு ரெட்டியார் 100**
*Centenary Committee Publications*

ISBN: 978-81-939685-4-3




*eBOOK ~ மின் நூல்*

# வைணவ புராணங்கள்

அருங்கலைக்கோன், சடகோபன் பொன்னடி, சேவா ரத்னா,
தமிழ்ப்பேரவைச் செம்மல், கலைமாமணி, ஆய்வுத்தமிழரசு,
பொதுமறைச் செம்மல், வைணவ இலக்கிய மாமணி

பேராசிரியர் முனைவர்

**ந சுப்பு ரெட்டியார்**

**முன்னாள் வாழ்நாள் மதிப்பியல் பேராசிரியர்**

தமிழ் இலக்கியத்துறை
சென்னைப் பல்கலைக்கழகம்





1916 2016

**ந சுப்பு ரெட்டியார் 100**

*Centenary Committee Publications*

# வைணவ புராணங்கள்



முதற்பதிப்பு – 2003
இரண்டாம் பதிப்பு - 2018

**Price: Rs.250.oo**

Published by:

**ந சுப்பு ரெட்டியார் 100**

*Centenary Committee Publications*

**AD-13, 5th Street, Anna Nagar West, Chennai – 600 040**




Wrapper design: **Centenary Committee**
Printed at: DJ Prints, Chennai – 600 095

தொண்டே செய்து

என்றும்தொழுது வழியொழுக

பண்டே பரமன்

பணித்த பணிவகையே[1]

- நம்மாழ்வார்



அமரர்

## நீதியரசர் என். கிருஷ்ணசாமி ரெட்டியார்

ஒழிவில் காலமெல்லாம்

உடனாய் மன்னி

வழுஇலா அடிமை

செய்ய வேண்டும்[2]

- நம்மாழ்வார்

1 திருவாய் - 10.4:9
2 மேலது - 3.3:1

வைணவராய் பிறந்து வைணவராய் வாழ்ந்து
பணியாற்றும் காலத்தில் வைணவ நெறிதவறாது பணியாற்றியும்
ஓய்வுபெற்ற பின்னரும்
பொது நிறுவனங்களில் வைணவ சீலராய்ப் பணியாற்றியும்
நிறைவாழ்வு வாழ்ந்து மறைந்த

அமரர்

**நீதியரசர் என். கிருஷ்ணசாமி ரெட்டியார்** அவர்கட்கு

## அன்புப் படையல்

வறியவர் சார்பில் இலவச மாக
வழக்குரை யாற்றிய வள்ளல்;
நிறைபுகழ் அறிஞர்; நீதியின் அரசர்;
நெஞ்சினில் திருமகள் கேள்வன்
உறைதர வாழ்ந்தோர்; ஆயினும் உலகில்
உளபிற மதங்களை மதிப்போர்;
அறிஞர்கள் வியக்கும் கிருட்டிண சாமி
அண்ணலுக் காம்இது படையல்!

முனைவர் பேராசிரியர் ஜே. பார்த்தசாரதி
அவர்கள் நல்கிய

# அணிந்துரை

உலகம் அறிவுபெற, பல பயனுள்ள நூல்களை இயற்றி, அவற்றை மக்களுக்கு வழங்கி, அவர்களைத் தெளிய வைப்பதன் மூலம் உலகப் பெருந் தொண்டு ஆற்றி வரும் எழுத்தாளர்கள் பலர். அவர்களில் ஒருவரே, நம் 'தமிழ்ச்செம்மல்', 'கலைமாமணி', 'ஸ்ரீ சடகோபன் பொன்னடி' பேராசிரியர் முனைவர் **சுப்பு ரெட்டியார்** அவர்கள்.

இப்பெருந்தகையார் இயற்றிய பல அரிய நூல்களில் ஒன்றுதான் இந்த '**வைணவப் புராணங்கள்**' என்னும் நூல். இது வைணவம் சார்ந்த அரிய ஆராய்ச்சி நூல்.

இந்த நூலில் 'இதிகாச பாகவதம்', 'புராண பாகவதம்', திருக்குருகை மான்மியம்', 'கூடற்புராணம்', 'இரு சமய விளக்கம்' என்னும் ஐந்து நூல்களைப் பற்றிய ஒருநிலையான ஆய்வுகள் உள்ளன.

இந்த ஐந்து நூல்களைப் பற்றிய செய்திகளை அறிவதற்கு உதவும்படியாய்ப் புராணம் என்றால் என்ன? புராணம் எப்போது தோன்றியது? புராணம் ஆன்மாவுக்கும் சமுதாயத்திற்கும் புரியும் தொண்டு என்ன? புராணங்கள் பல்வேறு மதங்களில் எப்படியெல்லாம் உள்ளன என்பன போன்ற செய்திகளை உடலுக்கு ஒரு முகம் போல விளக்குகின்றார் ஆசிரியர்.

இவர் எடுத்துக்கொண்ட நூல்களின் வரிசையைப் பார்த்தால் எல்லாமே மிகப்பல வைணவர்களுக்கு அறிமுகப்படுத்தப்படாத இலக்கியங்களே என்பது புரியும். வரிசை நிரலிலும் அறிமுகம் ஆகாதது, மேலும் அறிமுகம் ஆகாதது என்று ஐந்தும் அமைந்

---

ஆசிரியர் - 'வைணவம்' இதழ்,
25, பள்ளிக்கூடத் தெரு, கோயம்பேடு, சென்னை - 600 107.

திருப்பதைப் பார்க்கும்போது அறிமுகமாகாத இலக்கியங்களை அறிமுகப்படுத்திய தொண்டு புரியும்.

'இதிகாச பாகவதம்' செவ்வைச் சூடுவாராலே இயற்றப்பட்டது. 'புராண பாகவதம்' நெல்லி நகர் அருளாளதாசரால் இயற்றப்பட்டது. இவ்விரண்டுமே 'கண்ணன் கதை' கூறும் பாகவதங்களே, எனினும் 'இதிகாச பாகவதத்தை'விடப் 'புராண பாகவதம்' பலர்க்கும் அறிமுகம் ஆகாததால் அதன்பின் வைத்துள்ளார்.

அதற்கடுத்து உள்ளது 'திருக்குருகை மான்மியம்.' இது திருக்குருகைப் பெருமான் கவிராயரால் எழுதப்பட்டது. நம்மாழ்வார் பற்றிய காவியம் இதுவாகும். நம்மாழ்வாரையே எல்லோரும் அறிவர். ஆனால் நம்மாழ்வார் பெயரோடு இணைந்த 'மாறன்பா - பாவினம்', 'மாறன் அகப்பொருள்', 'மாறன் அலங்காரம்' போன்ற நூல்களையும் இயற்றிய திருக்குருகைப் பெருமான் கவிராயரால் இயற்றப்பட்ட திருக்குருகை மான்மியத்தை அறியாதாரே அதிகம். அப்படியான அழகிய நூலினை அறிமுகம் செய்துள்ளார் வைணவ இலக்கிய மாமணியான நமது ரெட்டியார் அவர்கள்.

அதற்கடுத்து 'கூடற்புராணத்தை' அறிமுகம் செய்கிறார். கூடல் அழகர் திருக்கோயிலைப்பற்றிய தலபுராணமே இந்நூல். இதை இயற்றியவர் பெயரும் தெரியவில்லை. இந்நூலின் சிறப்புகளும் தெரியவில்லை. இப்படியான ஒரு அரிய நூலை அறிமுகம் செய்கிறார் ஆசிரியர்.

அடுத்தது 'இரு சமய விளக்கம்.' இது தற்போது 'நாகலாபுரம்' என்று வழங்கப்படும் 'அரிதை' என்ற ஊரில் பிறந்த அரிதாசரால் இயற்றப்பட்டது. இந்த நூலைப் பலரும் கேள்விப்பட்டிருக்கலாம். ஆனாலும் என்ன உள்ளீடு என்று பலருக்குப் புரியாதிருந்தது. அதைப் புரிய வைத்துள்ளார் இந்த நூலாசிரியர்.

இப்படிப் படிப்படியாக மேலும் மேலும் அறிமுகமாகாத நூல்களை அறிமுகப்படுத்தியதே இவருடைய பெருந்தொண்டு எனலாம். இந்த விதத்தில் இவரைப் போற்ற வைணவ உலகம் மிகவும் கடப்பாடு கொண்டுள்ளது.

பேராசிரியர் சுப்பு ரெட்டியார் அவர்கள் இந்த ஐந்து நூல்களையும் அறிமுகப்படுத்தும்போது வரன்முறையாக நூலின் பெயர், நூலின் பாங்கு, நூலாசிரியரின் பெயர், நூலின் அமைப்பு முறை, அவ்வமைப்பு முறையில் உள்ள புதுமைகள், அந்நூலின் பாடல்கள், கம்பனையும் திவ்வியப் பிரபந்த ஆழ்வார்களின் சாயல்களைக் கொண்டிருக்கும் பாங்குகள் என்பன போன்ற பல செய்திகளையும் கொடுத்துள்ளார்.

ஐந்து நூல்களில் உள்ள அழகான பாடல்களையும் அறிமுகப்படுத்துவதோடு சில பர்டல்கள் உரைநடைப் போக்கையே கொண்டுள்ளன என்பதையும் சுட்டிக்காட்டுவது இவர்தம் நடுநிலையான அறிமுகமாகவே உள்ளது.

செவ்வைச் சூடுவார் பாகவதமான 'இதிகாச பாகவதத்திற்கும்', நெல்லி நகர் அருளாளதாசர் இயற்றிய 'புராண பாகவதத்திற்கும்' உள்ள ஒப்பீடுகள் மிக மிக அருமையாக உள்ளன. இரண்டிற்கும் கருப்பொருள் ஒன்றே எனினும் கட்டமைப்புகளில், கவிதைப் புனைவுகளில், தத்துவ தரிசனப் பாங்குகளில் உள்ள செய்திகளை மிகவும் அழகாகச் சுட்டிக் காட்டுகிறார்.

'திருக்குருகை மான்யம்', 'கூடற்புராணம்' இரண்டிற்கும் உள்ள குறை நிறைகளையும் தெளிவாக்குகிறார். அடைமொழிகளே இல்லாமல் மரங்களின் பெயர்களைச் சுருக்கிக் கூறும் திருக்குருகைப் பெருமான் கவிராயரின் புலமையை வியந்து போற்றுகிறார்.

'கூடற்புராணத்தில்' வரும் நரசிங்கரைப் பற்றிய செய்தி அரிய செய்தியாகும். நரசிங்கத்தின் உக்கிரம் தணியவில்லை. தேவர்கள் சரப மூர்த்தியை அனுப்பி நரசிம்மரின் உக்கிரத்தைத் தணிக்கச் செய்கிறார்கள். சரபத்தைக் கண்ட நரசிம்மர் அதை வென்று தானே சாந்தம் அடைகிறார் என்பதும் அரிய செய்தி.

'இரு சமய விளக்கமோ' வைணவம், சைவம் என்னும் இரு சமயங்களின் கொள்கைகள் பற்றியது. சைவத்தைவிட வைணவமே சிறந்தது என்று பேசுவது. பட்டி மன்றம் போல் அமைந்தது இரு பெண்களால் பேசப்படுவதாய் அமைந்துள்ளது. சைவ சமயக் கொள்கைகளைக் கண்டிக்கும் ஒரு விசித்திரமான நூல் என்று குறிப்பிட்டுள்ளது சரியான ஆய்வு முடிவாகும்.

வைணவ நங்கையான ஆரண வல்லிக்கும், சைவ நங்கையான ஆகம வல்லிக்கும் நிகழ்ந்த உரையாடல்களில் ஆரண வல்லி சிவனிடம் பல பிறப்புகள் உண்டு. திருமாலே பிறப்பிலி என்று நிறுவுகின்றாள். இப்படியான பல செய்திகளைக் கொண்டதே இந்த நூல் என்று அறிமுகப்படுத்துகிறார் ஆசிரியர்.

வைணவர்கள் மிகுந்த பண்பாடுள்ளவர்கள் என்பதை இந்த ஐந்து இலக்கியங்களின் வாயிலாக இந்நூலாசிரியர் வெளிப் படுத்துவது வைணவ சமயத்திற்கே ஒரு முடி சூடுவது போல் உள்ளது.

இரண்டு பாகவதங்களிலும் திருக்குருகை மான்யத்திலும் கூடற்புராணத்திலும் இந்த நாகரிகம் இருப்பதுகூடப் பெரிதல்ல; இரு சமய விளக்கத்தில் இரு பெண்களுமே ஒருவரை ஒருவர் விளித்துக் கொள்ளும்போது அழகான தொடர்கதையே சொல்லி விளித்துக் கொள்கிறார்களே அந்த அழகை ஆசிரியர் குறித்திருப்பது மிக மிக நயமானது. அதன் மூலம் வைணவர்கள் மிகவும் நாகரிகம் மிக்கவர்கள் என்பதைத் தெள்ளத் தெளிவாகக் காட்டுவது மிக மிகப் போற்றத்தக்கது.

ஏராளமான செய்திகளை உள்ளடக்கி நடுநிலையோடு வெளிப்படுத்தி, வைணவ மரபு வழிப் பண்பாட்டினை நமக்கெல்லாம் புரிய வைத்து, இந்த நூல்களைத் தேடிக் கண்டறிந்து படிக்க வேண்டும் என்று தூண்டுகிறாரே அதுவே மிகவும் உயிர்ப்பான செய்தியாகும்.

பதிப்பித்த சுரா புக்ஸ் (பிரைவேட்) லிமிடெட் நிறுவனத்தினரும் இந்நூலை வெளியிட்டதன் மூலம் தொண்டு புரிந்திருக்கின்றனர் என்றால் மிகையாகாது.

சென்னைப் பல்கலைக்கழக, தெற்கு, தென்கிழக்கு ஆசிய நாடுகளின் மரபு வழிப் பண்பாட்டு நிறுவனத்தின் இயக்குநராக உள்ள ஸ்ரீ சடகோபன் பொன்னடியான இப்பெருந்தகை நெடிது நாள் வாழ்ந்து இப்படியான பல வைணவ நூல்களை அருள வேண்டும் என்று எம்பெருமானை வேண்டிக் கொள்கின்றோம்.

வாழ்க தமிழ். வளர்க மனிதநேய வைணவம்.

அன்புடன்
ஜெ. பார்த்தசாரதி
(பேசி: 044-24754819)

கோயம்பேடு,
சென்னை - 600 107.

# நூல் முகம்

*ஒண்மிதியில் புனல் உருவி ஒருகால் நிற்ப,*
*ஒருகாலும் காமருசீர் அவுணன் உள்ளத்து*
*எண்மதியும் கடந்து, அண்ட மீது போகி,*
*இருவிசும்பி னூடுபோய் எழுந்து, மேலைத்*
*தண்மதியும் கதிரவனும் தவிர ஓடி,*
*தாரகையின் புறந்தடவி அப்பால் மிக்கு*
*மண்முழுதும் அகப்படுத்து நின்ற எந்தை*
*மலர்புரையும் திருவடியே வணங்கி னேனே*[1]

பரந்தாமன் பார்த்தன் தேரை இயக்கினதுபோல் ஒவ்வொருவர் இதயகமலத்திலும் அவன் வீற்றிருந்து இவ்வுடலாகிய தேரை இயக்கிச் செயற்படுத்துகின்றான். அங்ஙனமே ஒவ்வொரு மனிதனும் செயற்படுகிறான். அந்த இயக்கத்தின் அடிப்படையில்தான் இந்நூலும் எழுகின்றது. இதில் ஐந்து முக்கியமான புராணங்கள் மட்டிலுமே விளக்கப் பெற்றுள்ளன. இவை வழக்கிலில்லாதவை.[2]

என் அரிய நண்பரும் வைணவ சீலருமான திரு. வீ.வீ.கே. சுப்புராசு அவர்கள் (அதிபர், சுரா நூல் வெளியீட்டகம்) ஒரு சமயம் 'வைணவ புராணங்கள்' பற்றி ஒரு நூல் எழுதுமாறு பணித்தார்கள். அதை அவர் மறந்தே போனார். அந்த 'ஆணை' என் மனத்தை உறுத்திக்கொண்டே இருந்தது. பல்வேறு இலக்கியப் பணிகளில் ஈடுபட்டுக் கிடந்த அடியேனுக்கு சிறிது ஓய்வு கிடைத்தமையால் இந்நூல் எழுதத் துணிந்து அவனருளால் நிறைவு பெற்றது. பணித்த பண்பாளரும் இதனை உடனே அச்சேற்றி அடியார்களிடையே நடையாட விட்டமைக்கு என் அன்பு கலந்த நன்றி என்றும் உரியது.

ஆழ்வார் பாசுரங்களில் ஈடுபாடு கொண்டவரும், திருமழிசை பிரான், கலியன் பாசுரங்களில் ஆழங்கால் பட்டு ஆய்ந்து முறையே எம்ஃபில் டாக்டர் பட்டம் பெற்றவளும் என் அபிமான புத்திரியுமான

1 திருநெடுந்தாண்டகம் - 5

2 இன்று புழக்கத்திலுள்ள 'திருவேங்கடத் தல புராணம்', 'கோலாசல புராணம்' போன்றவை எடுத்துக்கொள்ளப் பெறவில்லை.

டாக்டர் மு.ப. சியமளா மூலப்படியையும், பார்வைப் படிமங்களையும் ஒப்பிட்டுச் சரிபார்த்தமைக்கு என் ஆசி கலந்த நன்றி என்றும் உரியது.

இந்த நூலுக்கு அரியதோர் அணிந்துரை வழங்கியவர் என் நெடுநாள் நண்பரும், சென்னை மாநிலக் கல்லூரியில் தமிழ்ப் பேராசிரியராகப் பணியாற்றி ஓய்வு பெற்றவரும், தம் வாழ்க்கையைத் தம் துணைவியுடன் வைணவத் தொண்டிற்கே அர்ப்பணித்தவரும், '**வைணவம்**' என்ற திங்கள் இதழின் ஆசிரியருமான டாக்டர் ஜெ. பார்த்தசாரதியாவார். அவர் இந்த நூலுக்கு அணிந்துரை நல்கியது இந்த நூல் பெற்ற பேறு; அடியேன் பேறும்கூட. அணிந்துரை அருளிய அன்பருக்கு என் இதயம் கனிந்த நன்றி என்றுமே உரியது.

இந்த நூல் அமரர் நீதியரசர் என். கிருஷ்ணசாமி ரெட்டியார் அவர்கட்கு (1913-2002) அன்புப் படையலாக்கப் பெறுகின்றது. பிறந்து, (21.12.1913) ஏழு நாட்களில் அன்னையை இழந்த நிலையில் சுவாமி இராமகிருஷ்ண பரமகிருஷ்ண சுவாமிஜி அவர்களால் வளர்க்கப் பெற்று கல்வி கற்பிக்கப்பெற்றமையால் அவர்தம் வாழ்க்கை ஆன்மிகம், நாட்டுப்பற்று, நடைமுறை உலக வாழ்க்கை, ஒழுக்க முறைகள் அனைத்தும் கைவரப்பெற்று சிறந்த குடிமகனாகத் திகழ வாய்ப்புகள் பெற்றுத் திகழ்ந்தார். 1939ல் சட்டப் படிப்பை முடித்து 1940ல் வக்கீல் தொழில் தொடங்கி 1950 முதல் பல்லாண்டுகள் அரசு வக்கீலாகப் பணியாற்றினார். 1958ல் முத்து இராமலிங்கத் தேவர் வழக்கையும், கோயம்புத்தூர் கிருஷ்ணன் கள்ள நோட்டு வழக்கையும் கையாண்ட நிகழ்ச்சிகள் பரபரப்பானவை; மக்கள் மனத்தைக் கவர்ந்தவை. இன்னொரு வழக்கு - பொய்யான அவதூறு வழக்கு - இராஜாஜியின் அருமை மகள் கைம்பெண் நாமகிரியைப் பற்றியது; 'சிவப்பு நாடா' என்ற மஞ்சள் இதழில் வெளிவந்தது. மனம் உடைந்த இராஜாஜி வழக்கு தொடுத்து கடுமையான தண்டனை வாங்கித் தருமாறு திரு. ரெட்டியாரை வேண்டிக்கொண்டார். அதனை அவ்வாறு செய்யாமல் வேறுவிதமாகக் கையாண்டார். "இப்படி இனி தொடர்ந்து எழுதினால் **விசாரணையின்றி** கடுமையான தண்டனையை ஏற்க ஒப்புக் கொள்கிறேன்" என்று எழுதிய வாசகத்தின் கீழ் கையெழுத்து வாங்கினார். இப்படிச் செய்தால் நிரந்தரமாகப் பிரச்சினை எழாது என்று இராஜாஜிக்கு விளக்கினார். இதனைத் தொலைபேசியில் கேட்ட இராஜாஜி அவர்கள் அடக்க முடியாத சிரிப்பால் ரெட்டியார்

அவர்களின் கூர்ந்த மதியைப் பாராட்டினாராம். 1960ல் தமிழக அரசு வக்கீலாகவும், 1964ல் அட்வொகேட் ஜெனரலாகவும், 1966ல் சென்னை உயர்நீதிமன்ற நீதியரசராகவும் நியமிக்கப்பட்டார்.

நீதியரசராகப் பணியாற்றிய காலத்தில் எம்.ஆர்.இராதா எம்.ஜி.ஆரைச் சுட்ட வழக்கைக் கையாண்ட முறையை நாடே வியந்து கவனித்தது. நீதியரசராகப் பணியாற்றியபோது ஏழை மக்களின் நலத்தைக் கருத்தில் கொண்டு சட்டத்தின் போக்கு கெடாமலும் அவர்கள் நலம் பெறும் வகையிலும் தீர்ப்பு கூறியதால் **'மக்கள் நீதிபதி'** என்று நாடே புகழ்ந்தது. இக்காலத்தில்தான் திருவேங்கடவன் பல்கலைக் கழகத்தில் 'இல்லற நெறி' என்ற என் நூலை இவர் கையால் வெளியிடச் செய்தேன். 'தொண்டை நாட்டுத் திருப்பதிகள்' என்ற என் நூலுக்கு அணிந்துரையும் பெற்றேன். நீதிபதியாக இருந்தபோது இவர் வழங்கிய தீர்ப்புகளைப் பொது மக்கள் நன்கு கவனித்தனர்.

1975, டிசம்பரில் நீதியரசர் பதவியிலிருந்து ஓய்வு பெற்றபின், பொதுத் தொண்டில் தீவிரமாக இறங்கி நாடே வியக்கும் வண்ணம் பணி புரிந்தார். பொதுவாக நீதியரசர்கள் ஓய்வுபெற்றபின் ஒதுங்கியே வாழ்வது வழக்கு. ஆனால் அதற்கு விதிவிலக்கு நம் நீதியரசர் ரெட்டியார் அவர்கள். இக்காலத்தில் அவர்தம் திருப்பணி மகத்தானது; பெரும் புகழ் வாய்ந்தது. அருள் ஞானப்பெருவழி, இந்து மருத்துவமனை, பசு காப்பகம், ஜெய்கோபால் கரோதியா பள்ளிகள், வள்ளுவர் குருகுலம் மகளிர் உயர்நிலைப் பள்ளிகள், விசுவ இந்து பரிசத், தமிழ்நாடு வித்தியா பாரதி, விவேகானந்தர் கல்வி நிறுவனம், விவேகானந்தர் கல்வி அறக்கட்டளை, விவேகானந்தர் கலை ஆசிரம அறக்கட்டளை ஆகிய பல்வேறு நிறுவனங்களின் பொறுப்பு இவர் பார்வையில் இருந்தன. அனைத்திற்கும் மகுடம் வைத்தாற்போன்றது தமிழ்நாடு இலவச வழக்கு வாரியத்தின் தலைவராக இருந்து பல்லாண்டுகள் பணியாற்றிய காலப் பகுதியாகும். இக்காலத்தில் அமைதியாக அநீதியை அநுபவித்துக்கொண்டு வாழும் ஏழைகள் இலவசமாக வழக்கு விசாரணை பெறும் திட்டம் ஒன்றைச் செயற்படச் செய்ததாகும். தேசிய காவலர் ஆணையத்திலும் உறுப்பினராக இருந்து பணியாற்றியது சிறப்பாகும். இங்ஙனம் பணியாற்றிய பெருமகனார் தமது 89வது அகவையில் வைகுண்ட பதவியை அடைந்த அன்று (7.12.2002) இத்தனை நிறுவனத்திற்குரியவர்கள்

இவர்தம் இல்லங்களில் கண்ணீர்க் கடலில் மூழ்கியிருக்கும் காட்சி நெஞ்சை உருக்கியது. நூற்றுக்கணக்கான மாணவர் அழுத கண்ணீருடன் வந்து போன காட்சி கல் நெஞ்சத்தையும் உருக்கும் தன்மையது. (9.12.2002) காலை 9.30 மணிக்கு அண்ணா நகர் மின்சார மயானத்தில் ஈமச் சடங்கும் நிறைவு பெற்றது.

இங்ஙனம் பல்வேறு வகையில் தொண்டாற்றி நிறை வாழ்வு வாழ்ந்த பெருமகனாருக்கு - வைணவ சீலருக்கு - '**வைணவ புராணங்கள்**' என்ற இந்த நூலை அன்புப் படையலாக்கி என் மதிப்பையும் மரியாதையையும் புலப்படுத்திக் கொள்கின்றேன்.

என்னை 87 அகவை வரை இவ்வுலகில் நல்ல உடல் நலத்துடனும் மன வளத்துடனும் வாழ வைத்து இந்நாள் வரை கண்ணொளி கெடாமல் படிக்கவும், எழுதவும் வாய்ப்புகள் நல்கி என் இதயத்தில் என்றும் நிலையாக எழுந்தருளியிருக்கும் வேங்கடம் மேய விளக்கிற்குப் பெரிய பிராட்டியின் மூலம் எண்ணற்ற சரணாகதி வணக்கங்கள்.

*இடிக்குரல் யானை வெண்கோடு*
*இறுத்தவன் இணைப்பொற் றாளின்*
*கடித்துணர் புணையாக் கைகள்*
*கையறு கைக ளாமால்;*
*பொடித்தசெங் கதிர்போற் காந்தி*
*பொழிமணிச் சூட்ட ராவின்*
*நடித்தவன் நாமம் பாடா*
*நாவழுங் காத நாவே*[3]

- செவ்வைச் சூடுவார்

'வேங்கடம்'
AD-13, அண்ணா நகர்,
சென்னை - 600 040.

- ந. சுப்பு ரெட்டியார்

3 இதிகாச பாகவதம்



பிறப்பு : 27-08-1916

## இந்நூலாசிரியரைப்பற்றி . . .

87 அகவையை எட்டிய நிலையிலுள்ள இந்நூலாசிரியர் எம்.ஏ., பி.ஏ., பி.எஸ்சி., எல்.டி., வித்துவான், பிஎச்.டி., டி.லிட். பட்டங்கள் பெற்றவர்.

ஒன்பதாண்டுகள் துறையூர் உயர்நிலைப் பள்ளி நிறுவனர் தலைமையாசிரியராகவும் (1941-50), காரைக்குடி அழகப்பா ஆசிரியர் பயிற்சிக்கல்லூரியில் தமிழ்ப்பேராசிரியர் - துறைத் தலைவராகவும் (1950-60), பதினேழு ஆண்டுகள் திருவேங்கடவன் பல்கலைக் கழகத்தில் நிறுவனர் பேராசிரியர் - துறைத்தலைவராகவும் (1960-77) பணியாற்றி ஓய்வு பெற்றவர்.

1978 சனவரி 14இல் சென்னையில் குடியேறிப் பதினைந்து மாதங்கள் (1978 பிப்பிரவரி - ஜூன் 1979) தமிழ்க் கலைக்களஞ்சியத்தின் முதன்மைப் பதிப்பாசிரியராகப் பணியாற்றியவர். திருப்பதி திருவேங்கடவன் பல்கலைக் கழகத்தின் தமிழ்த் துறையில் மூன்று மாதங்கள் மதிப்பியல் பேராசிரியராகவும் 1989 மே முதல் 1990 அக்டோபர் முடிய 18 திங்கள் தஞ்சைத் தமிழ்ப் பல்கலைக் கழகம் - காஞ்சித் தத்துவ மையத்தில் தகைஞராகவும் பணியாற்றி 1200 பக்கத்தில் '**வைணவச் செல்வம்**' என்ற ஒரு பெரிய ஆய்வு நூலை உருவாக்கி வழங்கியவர். முதற்பகுதி 1995இல் 575 பக்கத்தில் வெளி வந்துள்ளது. இரண்டாவது பகுதி அச்சேறும் நிலையில் உள்ளது. (த.ப.க. வெளியீடு) 1996-பிப்பிரவரி முதல் சென்னைப் பல்கலைக் கழகத் தெற்கு, தென்கிழக்கு ஆசிய நாடுகளின் மரபுவழிப் பண்பாட்டு நிறுவனத்தில்

மதிப்பியல் இயக்குநராகவும் பணியாற்றுபவர். சென்னைப் பல்கலைக் கழகத் தமிழ் இலக்கியத்துறையில் மதிப்பியல் பேராசிரியராக (வாழ்நாள் வரை)வும் இருந்து வருபவர். ஆய்வு மாணவர்கட்கு வழிகாட்டியாகவும் இருப்பவர்.

நாலாயிரத் திவ்வியப் பிரபந்தத்தில் நம்மாழ்வார் தத்துவத்தை ஆய்ந்து டாக்டர் (பிஎச்.டி) பட்டம் பெற்றவர். அந்த ஆய்வு நூல் ஆங்கிலத்தில் 940 பக்கங்களில் திருவேங்கடவன் பல்கலைக் கழக வெளியீடாய் வெளிவந்துள்ளது. எம்.ஃபில்., பிஎச்.டி. மாணாக்கர்களை உருவாக்கியவர். தமிழிலும், ஆங்கிலத்திலும் பல ஆய்வுக் கட்டுரைகளை வெளியிட்டவர். பெரும்பாலும் இவை நூல் வடிவம் பெற்றுள்ளன. பெற்றும் வருகின்றன. தவிர, ஆசிரியம், கல்வி உளவியல் (5), இலக்கியம் (22), சமயம், தத்துவம் (35), வாழ்க்கை வரலாறு, தன் - வரலாறு (13), திறனாய்வு (21), அறிவியல் (20), ஆராய்ச்சி (6) ஆக 122 நூல்களை வெளியிட்டவர்.

இவர்தம் அறிவியல் நூல்களுள் மூன்றும், சமய நூல்களுள் நான்கும் தமிழக அரசுப் பரிசுகளையும், அறிவியல் நூல்களுள் ஒன்று சென்னைப் பல்கலைக் கழகப் பரிசினையும், அறிவியல் நூல்களுள் ஒன்று தமிழ் வளர்ச்சிக் கழகப் பரிசினையும் ஆக 9 நூல்கள் பரிசுகள் பெற்றன.

இவர்தம் அறிவியல் நூல்களைப் பாராட்டிக் குன்றக்குடி திருவண்ணாமலை ஆதீனம் 'அருங்கலைக்கோன்' என்ற விருதினையும் (1968), வைணவ நூல்களைப் பாராட்டிப் பண்ணுருட்டி வைணவ மாநாடு 'ஸ்ரீசடகோபன் பொன்னடி' என்ற விருதினையும் (1987), தமிழ்ப்பணியைப் பாராட்டித் தமிழக அரசு 'திரு.வி.க.' விருதினையும் (10,000 வெண்பொற்காசுகள் - 1987), இவர்தம் தமிழ்ப்பணியைப் பாராட்டி மதுரை காமராசர் பல்கலைக் கழகம் 'தமிழ்ப் பேரவைச் செம்மல்' என்ற விருதினையும் (1991), இராஜா சர் அண்ணாமலைச் செட்டியார்அறக்கட்டளை கல்வி, இலக்கியம், அறிவியல் என்ற மூன்று துறைகளில் இவர்தம் பணியைப் பாராட்டி 'இராஜா சர் முத்தையவேள்' விருதினையும் (50,000 வெண் பொற்காசுகள் - 1994), இவர்தம் கம்பன் பணியைப் பாராட்டிச் சென்னைக் கம்பன் கழகம் 'பேராசிரியர் இராதாகிருஷ்ணன்' விருதினையும் (1994 - 1000 வெண்பொற்காசுகள்), சென்னை ஆழ்வார்கள் ஆய்வு மையம் இவர்தம் வைணவ வெளியீடுகளைச்

சிறப்பிக்கும் முறையில் 'ஸ்ரீ இராமாநுஜர் விருதை'யும் (1996 - 25,000 வெண் பொற்காசுகளையும்) வழங்கிச் சிறப்பித்துள்ளன.

அண்மையில் இவர்தம் இயற்றமிழ்ப் பணியைப் பாராட்டித் தமிழ் இயல் இசை நாடக மன்றம் (அரசு) '**கலைமாமணி**' என்ற விருதினையும் (1999 - 3 சவரன் தங்கப் பதக்கம்), இவர்தம் தமிழ்ப் பணியைப் பாராட்டிச் சென்னை கோயம்பேடு மனிதநேய வைணவ இயக்கம் 'வைணவ இலக்கிய மாமணி' என்ற விருதினையும், (2001), மதுரை காமராசர் பல்கலைக்கழகம் 'டி.லிட்' (கண்ணியம்) என்ற பட்டத்தையும் (1999), காஞ்சி காமகோடி பீட அறக்கட்டளை 'சேவாரத்னா' விருதினையும், (1000 வெண்பொற்காசுகள் - 1999) இவர்தம் வைணவப் பணியைப் பாராட்டி வழங்கிச் சிறப்பித்துள்ளன. இவர்தம் வாழ்நாள் தமிழ்ப் பணியைப் பாராட்டி 'தினத்தந்தி சி.பா. ஆதித்தனார் விருது' (2001 - ஓர் இலட்சம் வெண் பொற்காசுகள்) வழங்கிச் சிறப்பித்தது.

துறையூர் பக்கம் (திருச்சி மாவட்டம்) இவர் ஆற்றிய கல்விப் பணியைப் 1941-50) பாராட்டி துறையூர் நகராண்மைக் கழகமும், துறையூர் தமிழ்ச் ங்கமும் (2001) இவரைப் பாராட்டி மகிழ்ந்தது.

இவர்தம் சைவ சமய-இலக்கியப் பணியைப் பாராட்டி திருப்பெருந்திரு. சோமசுந்தரர் குருவருள் அருட்பணி மன்றம் (6, சந்தைப் பண்ணை, புது வண்ணாரப்பேட்டை, சென்னை - 81) தமது 11-வது திருமந்திர முற்றோதல் விழாவில் '**ஆய்வுத் தமிழரசு**' என்ற விருதும், ரூ. 3,000/-மும் வழங்கிச் (2001) சிறப்பித்தது.

இவர்தம் தெய்வத் திருக்குறள் பணியைப் பாராட்டி குருபழநி ஆதீனம் திருக்குறள் பீடம் (குருகுலம், மதுராந்தகம் - 603 306) "**பொதுமறைச் செம்மல்**" என்ற விருதும், ரூ. 2,000/மும் வழங்கிச் (2002) சிறப்பித்தது.

இவர்தம் பல்வேறு துறைத் தமிழ்ப்பணியைப் பாராட்டி சேலம் தமிழ்ச் சங்கம் '**தமிழ் வாகைச் செம்மல்**' விருதையும் ரூ. 10,000/-மும் வழங்கி (மார்ச்சு, 2003) சிறப்பித்தது.

இனிமை, எளிமை, தெளிவு இவர்தம் நூல்களின் தனிச் சிறப்பியல்புகள் ஆகும்.

## உள்ளுறை



## பின்னிணைப்பு

# 1. வைணவ புராணங்கள்

சங்க இலக்கிய ஆராய்ச்சியே ஆராய்ச்சி என்று ஒரு காலத்தில் மக்கள் கருதி வந்தனர். சங்க இலக்கியம் என்பது இரண்டாயிரத்து ஐந்நூறு ஆண்டுகளாக வளர்ந்து வந்துள்ள தமிழ் இலக்கியங்களில் ஓர் ஐந்நூறு ஆண்டுக்காலப் பகுதி; பிற்காலப் பகுதிகள் இதுபோல உள்ளன. இவற்றிலும் கவனம் செலுத்துவது அவசியம் என்பதைத் தமிழ் ஆய்வாளருக்கு அடியேன் சொல்லத் தேவையில்லை. இவற்றில் ஒன்று 'புராண இலக்கியம்' என்ற துறையாகும். இத்துறை காலத்தால் பிற்பட்டதாயினும் அளவாலும் பொருளாலும் மிக விரிந்தது; இத்துறையில் கவனம் செலுத்தினால் சிறந்த பயன் தரும் என்பதில் சிறிதும் ஐயம் இல்லை.

இடைக்காலத் தமிழில் அளவால் ஒரு பெரும் பகுதி புராண இலக்கியம். இதனைப் புறக்கணிக்கின்ற அல்லது தூற்றுகின்ற எந்த வரலாறும் முழுமையுடையதாகாது. இடைக்காலம் என்ற ஒரு பெருங்கால அளவின் (நானூறு ஆண்டுக்கால அளவின்) மக்கள் வாழ்க்கையைப் பிரதிபலிக்கும் சிறப்புமிக்க இலக்கியத்துறையை நோக்காத வரலாற்றாராய்ச்சி ஆராய்ச்சி ஆகாது. இக்கால மக்கள் பெரும்பாலும் சமயத் துறையிலேயே மனம் செலுத்தி இருந்தனர். அதன் விளைவுகளில் ஒரு பகுதியே புராண இலக்கியம் ஆகும்.

புராண இலக்கியங்கள் பல சிறந்த இலக்கியச் சுவை உடையன என்பதை அத்துறையில் ஈடுபாட்டுடன் நோக்கி ஆய்பவர்களே நன்கு அறிவார்கள். புராண இலக்கியங்களுள் சிறந்தவை பிற எந்தச் சிறந்த இலக்கியங்களுக்கும் குறைவானவை அல்ல என்பதைத் தெளிவாகவும் உணர்வார்கள். உலக நீதிகள், ஆட்சி முறை, நாட்டு வருணனை, அகத்துறை முதலியவற்றைப் புராணங்களுள் காணும்போது, இவை பிற எந்த இலக்கியத்துக்கும் பின் தங்கியவை அல்ல என்பதும் புலனாகும். நறுந்தொகையும் நைடதமும் பாடும் ஆற்றல்

உடைய அரசன் புராணம் படைக்கப் புகுந்தால் அப்புராணத்தில் எவ்வாறு இலக்கியச் சுவை குன்றிப்போகும் ? என்பதைச் சிந்தித்து நோக்கினால் உண்மை பளிச்சிடும்.

புராண இயல்புகளாகச் சிலவற்றைக் கருதலாம்:

(1) எல்லாப் புராண ஆசிரியர்களும் மேற்கொள்ளும் சில சிறப்பான தன்மைகளைச் சுட்டிக் காட்டலாம். போர் என்று வந்தால் எல்லா ஆசிரியரும் மிகுதியாகப் போர் வருணனையில் ஈடுபடுகின்றனர். இதற்கும் சில காரணங்கள் உள்ளன. **ஒன்று,** போர் காப்பியத்துள் ஓர் அங்கம் (செலவு இகல் வென்றி). இவர்கள் தண்டியாசிரியர்க்குப் பிற்பட்டவர்களாதலால் போரை மிகுத்துச் சொல்கின்றனர். **இரண்டு,** அவர்கள் வாழ்ந்த சூழ்நிலை, அரசியல் நிலையற்றுக் கொந்தளிப்பு மிகுந்திருந்த காலம். எனவே, போர்களைத் தாங்களே நேரில் கண்டும் அல்லது நேரில் கண்டவர்களிடம் உசாவியும் இவர்கள் வருணிக்கின்றனர் என்று கருதலாம். **மூன்று,** பொதுவாக இவர்கள் எழுதுகோல் வீரர்களேயன்றி வாள் வீரர்கள் அல்லர். இவர்கள் வாளேந்திப் போரிடாவிடினும் தங்களின் பாடல் மூலம் வாளேந்திப் போரிடுகின்றனர்.

(2) தங்களுக்குத் தெரிந்தவற்றையெல்லாம் விரித்துக் கூறும் முயற்சி மற்றொன்று. பல புராணங்கள் இலக்கணச் செய்திகளை விவரிக்கும். இலக்கணத்துக்காக யமகம், திரிபு, மடக்கு முதலியன அதிகம் செய்து பாடுகின்றனர். மரங்கள் என்று வந்தால் இருபது வகைகள்; யாவும் அடைமொழி விரவாமல் கூறப் பெறும். தெரிந்த தலம் எல்லாம் ஒப்புவிப்பார்கள். சமயம் என்று வந்தால் சைவ சித்தாந்தச் செய்திகள், வைணவச் செய்திகள் யாவும் இதில் அடங்கும். பூசை என்று வந்தால் எல்லாக் காரியங்களும் இடம் பெறும். இஃது இயல்பேயாகும். சமயத்தை வலியுறுத்திப் பாடுதலே இவர்கள் புராணம் செய்ததன் நோக்கமன்றோ ? வைணவம் என்று வந்தால் பெரும்பாலும் தசாவதாரங்களையும், ஆழ்வார்களையும் குறிப்பிடாமல் இருக்க முடியாது.

(3) மக்களை நல்வழிப்படுத்தும் நோக்கம் மேலோங்கி நின்றமையால், ஒழுக்க நெறி பிறழ்ந்தால் நரக வாழ்வே பலன் என்பது

தவறாமல் குறிப்பிடப்பெறும். நரக வகைகள், நரகத் துன்பங்கள் மிகுதியாயிருக்கும். இங்கு பகுத்தறிவிற்கு இடம் இல்லை. பார்த்து அநுபவிக்காத பலவற்றை நம்பித்தான் அன்றாட வாழ்க்கையில் ஏற்கின்றோம். அறிவியலிலும் மருத்துவத்திலும் இப்படி எத்தனையோ உள்ளனவே! இவர்களும் மருத்துவம் செய்கின்றனர். துன்பம் வேண்டாம் என்பதுதான் எல்லோருடைய எண்ணமும். ஆகவே, நெறி பிறழ்ந்தால் துன்பம் என்று சொல்லி அச்சுறுத்தியே ஒழுக்கத்தை நிலை நாட்டப் பார்க்கின்றனர். அன்றைய சூழ்நிலைக்கு இது பொருந்துவதேயாகும். 'அரசு அன்று கொல்லும்; தெய்வம் நின்று கொல்லும்' என்பது அன்றைய நம்பிக்கை. எனவே, புராணங்களின் இந்த இயல்பைப் பழிப்பது நம்மை நாமே பழிப்பதாகும்.

(4) தெய்வத்தை வேண்டுதல் என்பது அன்றிருந்த ஓர் இயற்கை நியதி. இன்று மனிதனைத் தெய்வமாக வேண்டவில்லையா ? எனவே தோத்திரப் பாடல்கள் நூலெங்கும் மிகுந்து காணப்பெறும். இவற்றை மனப்பாடம் செய்து பொது மக்கள் இறைவனிடம் ஓதலாம் என்றுகூட ஆசிரியர்கள் சொல்லியிருப்பார்கள். 'அருளாளதாசர் பாகவதம்' போன்ற நூல்களில் தோத்திரப் பாடல்களே மிகவும் அதிகம். (முந்நூறுக்கும் மேல்) கவச நூல்களும் அதிகமாய் எழுந்துள்ளன. இவற்றின் ஒரு சிறப்பான நோக்கம் சூழ்ந்துள்ள கோளாறுகளை மறந்து மனிதனுக்கு ஆறுதலும் சாந்தியும் அளிப்பதாகும். இவை புராணம் என்ற நிலையையொட்டி எழுந்த சிறப்பான இயல்புகளாகும்.

புராணங்களின் இன்றியமையாமையை நிலைநிறுத்தவே இவ்வளவும் கூறப்பெற்றது. இந்நிலையில் வைணவ புராணங்கள் பற்றித் தெரிந்து கொள்ளவே இம்முயற்சி மேற்கொள்ளப் பெறுகின்றது. இந்நூல் இரண்டு பிரிவுகளாக எழுதப்பெறுகின்றது. முதல் பகுதியில் புராண இலக்கியம் பற்றிய சில செய்திகள் விளக்கம் பெறுகின்றன. இரண்டாம் பகுதியில் வைணவ புராண இலக்கியம் பற்றிச் சில செய்திகள் கூறப்பெற்று ஐந்து புராணங்கள் பற்றி விரிவான விளக்கம் தரப்பெறுகின்றது. வைணவப் பெருமக்களுக்கு சிறந்த முறையில் பயன்படும் என்று கருதியே இந்நூல் எழுதப்பெற்றது. இனி, நூலில் புகுந்து விரிவாக ஆழ்ந்து நோக்குவோம்.

# 2. புராண இலக்கியம் - விளக்கம்

தமிழ் இலக்கிய வரலாற்றில் புராண இலக்கியம் பெரும் பகுதி. இது அளவாலும் மிக விரிந்தது; பொருளாலும் மிக்க ஆழமானது. பெரும்பாலும் இப்புராண இலக்கியம் வடமொழியைத் தழுவியே வளர்ந்தது. பெரும் புராணங்கள் யாவும் வடமொழியிலிருந்து தமிழாக்கம் பெற்றவை.

புராணம் - பழங்கதை. 'புராணம்' என்ற வடசொல் 'பழமை' என்று பொருள்படும். திருவாசகத்தின் முதல் அகவல் '**சிவபுராணம்**' என்றே பெயர் பெற்றுள்ளது.

*சிந்தை மகிழச் சிவபுராணம் தன்னை*

*முந்தை வினைமுழுதும் ஓய உரைப்பன் யான்*[1]

என்பது மணிவாசகரின் வாக்கு. திருவாசகப் பதிகங்களுக்குக் கருத்து எழுதினோர் இத்தொடருக்கு 'சிவனது அநாதி முறையான பழமை' என்று எழுதியுள்ளனர். புராணன் - பழமையானவன்; முன்னைப் பழம் பொருட்டு முன்னைப் பழம் பொருளாயுள்ள இறைவன்.

'போற்றி போற்றி புராண காரண' என்பது திருவாசகம் (போற்றித் திருவகவல் 224); புராண சிந்தாமணி என்பது சேந்தனார் திருவிசைப்பா. 'ஆதி புராணன்' என்பது திருமந்திரம் (1557). 'பூரணன் காண், புண்ணியன் காண், புராணன் தன்காண்' என்பது திருக்காளத்தி பற்றிய தேவாரத்தில் அப்பர் வாக்கு (6.8:3) 'பூமி புகலூர் மேய புராணன் போலும், பூதங்களாகிய புராணன் தானேயாகி' என்பதும் அவர் வாக்கே. புராணன் என்ற பெயரைச் சம்பந்தர் பலமுறை குறிப்பிடுவார். 'பாசுபதம் புரிந்தளித்த புராணர் கோயில்' (சம். தேவா. 1.131:2), 'உள்ள புண்டரிகத்துள்ளிருக்கும் புராணர் கோயில்' (மேலது 1.132:6), 'கூவினர்... சடையிற் பொலிந்த புராணனார்', (மேலது 2.7:1), 'அர்ச்சிக்க இருந்த புராணன்' (மேலது 2.10:1) என்பன காண்க.

---

1 திருவா. சிவபுரா. அடி 19-20

இளங்கோ அடிகள் 'அருகன்' பெயரை 'புராணன்' என்ற சொல்லால் குறிப்பிடுவர். அடியார்க்கு நல்லார் 'புராணன்' என்ற சொல்லுக்குப் 'பழையவன்' என்று பொருள் கூறுவர். இராமன் சீதையோடு கானகம் சென்று கடுந்துயர் உழந்தான் என்பதை இளங்கோ அடிகள் 'நெடுமொழி' என்று குறிப்பிடுவர். அடியார்க்கு நல்லார் 'நெடுமொழி - புராணக்கதை' என்று விளக்குவர்.

புராணம் வடமொழி இலக்கியத்தில் போற்றத்தக்க ஒரு சிறந்த பிரிவு. 'வேதாகம புராண இதிகாசம்' என்பது ஒரு வடமொழி வழக்கு. ஏனைய யாவும் இவற்றினுள் அடக்கம் என்பது கருத்து. வடமொழி மட்டுமன்றி இந்திய மொழிகள் அனைத்திலுமே புராண இலக்கியம் ஒரு சிறப்பான பகுதி. 'புராணம்' என்ற சொல் உபநிடதங்களிலும் காணப் பெறுகின்றது. புராண நூல்கள் அதர்வண வேதம் தோன்றிய காலத்திலேயே ஒரு சிறந்த இலக்கியமாகக் கொள்ளப் பெற்றன என்பர். மகாபாரதம் புராணப் பெயர்களைக் குறிப்பிடுகின்றது. வேத காலத்திற்கு முன் ஆதி புராணங்கள் கதைகளாக வழங்கின என்றும், புத்தர் காலத்திற்கு முன் ஆதிபுராணங்கள் எழுதப் பெற்றன என்றும், ஏனையவை அவர் காலத்திற்குப் பின் எழுதப் பெற்றன என்றும் ஆன்றோர் கருதுவர்.

விஷ்ணுவே வேத வியாசராக அவதரித்தார் என்பது வடநூல் மரபு. ஒன்றாகக் கலந்து கிடந்த வேதங்களை அவர் **இருக்கு, யசுர், சாமம், அதர்வணம்** என நான்காகப் பிரித்து அமைத்தமையால் அவர் '**வேதவியாசர்**' என வழங்கப்பெற்றார்.

'புராணம்' என்கிற வடசொல் 'புரா-நவ' என்ற இரு வேர்களிலிருந்து பிறந்தது; இதன் பொருள் பழமைக்கும் பழமையாய்ப் புதுமைக்கும் புதுமையாய் உள்ளது என்பர். இதுவே நாம் கருதும் புராணம். பழமையான எந்த வரலாறுகள் இன்னும்கூட மக்களிடையே சொல்லப் பெற்று வழங்குகின்றனவோ அவையே புராணம் என்பதாகும்.

வடமொழியில் ஒரு நண்பன் புத்தி சொல்லி நல்லொழுக்க உணர்ச்சியை ஊட்டுவது போல பழைய கதைகளைச் சொல்லி நீதியை உணர்த்துகின்றவை புராண இதிகாசங்கள் என்று பகரப் பெறும். எனவே, புராணங்களில் கதைகளே சிறந்திருப்பினும் அவை

காவியங்களாகிச் சுவைகளையும் ஏற்று, தெய்வ பக்தி, நல்லொழுக்கம் போன்ற நற்பண்புகளை வளர்த்து வருகின்றன.

**தமிழில் புராணம் பற்றிய குறிப்பு:** 'புராணம்' என்பது பழமை சார்ந்த வரலாறு என்ற வழக்கு தமிழில் இருந்தது என்பதை அப்பர் தேவாரத்துள் இரு பதிகப் பெயர்களாலும் அறியலாம். நாலாம் திருமுறையில் ஒரு பதிகம் (4.14) **தச புராணம்** என்ற பெயர் பெறுகின்றது. இதன் பாடல்கள் சிவபிரான் ஆலகால விஷம் உண்டது (1), முடியோடு பாதம் அறியாமல் நின்றது (2) முதலான பராக்கிரமச் செயல்களைச் சொல்லித் துதிக்கின்றன. மற்றது இலிங்க புராணக் குறுந்தொகை என்பது ஐந்தாம் திருமுறையில் ஒரு பதிகம் (5.96). செங்கணானும் பிரமனும் தேடச் சுடர் வடிவாய் சிவபெருமான் நின்ற நிலையை மட்டுமே கூறுவது. இவ்விரு பதிகங்களும் பழங்கதைகளை மட்டுமே எடுத்துக் கூறுவதால் இப்பதிகங்கள் '**புராணம்**' என்று சிறப்பாய்ப் பெயர் அமைக்கப் பெற்றன என்பதாக அறிய முடிகின்றது.

திருமூலர் 'இலிங்க புராணம்' என்ற ஒரு பகுதியை அமைத்துள்ளார்.[2] இங்கு சிவபராக்கிரமங்கள் ஐந்தினைக் குறிப்பிடுகின்றார். மலைமகனார் மகளாகி அர்ச்சித்து பக்தி செய்தல் (1), சிவபெருமான் திருமாலுக்கு ஆழியையும் நான்முகனுக்கு வாளும் கொடுத்தமை (2), கைலாய மலையைத் தூக்கிய இராவணனை நெரித்து பின் ஆட்கொள்ளல் (3), தண்டிக்கு அருளியது (4), தேவர்கட்கு அருளியது (5) என்பவை காண்க.

'இலிங்க புராணக் குறுந்தொகை' என்ற பெயரைக் கொண்டு அப்பர் காலத்தில் வடமொழி இலிங்க புராணம்[3] தமிழில் நல்ல ஆட்சி பெற்றிருந்ததென்றும் கருதலாம். இன்னும் ஒரு நூற்றாண்டு கழித்து,

இலிங்கத்து இட்ட புராணத்தீரும்,
சமணரும், சாக்கியரும்,
வலிந்து வாதுசெய்வீர்களும், மற்றும்நும்
தெய்வமும் ஆகிநின்றான் (திருவாய் 4.10:5)

2 திருமந். இரண். தந்திரம். இலிங்க புராணம் 347-52

3 'இலிங்க புராணம்' என்ற பெயரில் வரகுணராம பாண்டியன் என்பாரால் பாடப்பெற்ற ஒரு தனி நூலும் உண்டு (16ஆம் நூற்றாண்டு).

என்று நம்மாழ்வார் அருளிச் செய்வதாலும் இப்புராணத்தின் ஆட்சி இருந்தமை நன்கு அறியலாம். மேலும், பதினெண் புராணங்களையும் சம்பந்தப் பெருமான் குறிப்பிட்டுப் பாடுவதும் ஈண்டு அறியத்தக்கது.

*எங்கு மாகி நின்றானும்*
*இயல்பறி யப்படா*
*மங்கை பாகம் கொண்டானும்*
*மதிசூடு மைந்தனும்*
*பங்க மில்பதி னெட்டொடு*
*நான்குக் குணர்வுமாய்*
*அங்க மாறும் சொன்னானும்*
*ஐயாறுடை ஐயனே (2.6:6)*

என்பது சம்பந்தர் தேவாரம். 'பங்கமில் பதினெட்டு' என்பது பதினெண் புராணமாகும். நான்கு வேதம்; அங்கமாறு - வேதாங்கம் ஆறு.

காலத்தால் இன்னும் முன்னதான **மணிமேகலை** என்னும் நூலில் புராணக் குறிப்பு வருகிறது. 'சமயக் கணக்கர் தம் திறம் கேட்ட காதை'யில் வைணவவாதியைக் குறிப்பிடும்போது 'காதல் கொண்டு கடல்வண்ணன் **புராணம்** ஓதினன்' என்று குறிப்பிடுகின்றார். இங்கு ஆசிரியர் விஷ்ணு புராணத்தைக் குறிப்பிடுகின்றார் என்பது வெளிப்படை (கடல்வண்ணன் - திருமால், விஷ்ணு)

பழங்கதையை உயர்த்திச் சொல்லி அதை சமயத்துறையில் காக்க வேண்டிய பெருமையைத் தந்தவர் சைனர். ஆதியில் இவர்கள் அன்னிய நாட்டிலிருந்து வந்தவர்களாதலாலும், தமிழுக்குப் புறம்பான ஒரு சமயத்தையும் நாகரிகத்தையும் தமிழகத்தில் புகுத்த முற்பட்டவர்களாதலாலும் இவர்கள் இவ்வாறு தங்களுக்கென்று ஒரு பாதையை மேற்கொண்டது இயற்கையே. சீவக சிந்தாமணியே ஒரு **புராணம்** என்பது நினைவுகூரத்தக்கது. புராணம் என்ற பெயரோடு நாம் அறிவன **புராண சாகரமும், சாந்தி புராணமும்** ஆகும். முன்னது பஃறொடை வெண்பாவாலானது (காலம் 9ஆம் நூற்றாண்டு - யாப்பருங்கல விருத்தியால் அறியப்பெறுவது). சாந்தி புராணம் சாந்தி

நாதர் என்ற பதினாறாவது சைன தீர்த்தங்கரரின் வரலாற்றைக் கூறும் ஒரு விரிந்த புராணம் போலும். இதன் பாடல்கள் சில **புறத்திரட்டில்** தொகுக்கப்பெற்றுள்ளன (காலம் எட்டாம் நூற்றாண்டாகலாம்). இவ்விரு நூல்களும் இன்று இல்லை.

புராணம் என்ற பெயர் கொண்டு புராணமில்லாத நூல்களும் உண்டு. எடுத்துக்காட்டாக '**அரிச்சந்திர புராணம்**.' இது புராணம் அன்று; மாபாரதத்தின் கிளைக் கதைகளில் இதுவும் ஒன்று. **வீரன்** என்ற பெயருடைய ஆசு கவிராசர் இதைக் காப்பியச் சுவைபட ஒரு சிறு காப்பியமாகப் பாடினார். 19-ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் இக்காவியம் 'அரிச்சந்திரன் சரித்திரம்' என்றே அச்சிடப் பெற்றிருந்தது. பின்னர் அச்சிட்டவர்கள் 'புராணம்' என்ற பெயர் இருந்தால் மக்கள் விரும்பிப் படிப்பார்கள் என்ற எண்ணத்தால் 'அரிச்சந்திர புராணம்' என்று பெயர் மாற்றம் செய்தார்கள் போலும். இதுபோலவே சிறு காவியமாகப் பாடப்பெற்ற கிளைக் கதைதான் **நைடதம்**, புரூரவன் பற்றிய சரிதமாகிய '**புரூரவன் சரிதம்**'. இவை மூன்றுமே (16-ஆம் நூற்றாண்டில்) எழுந்தவை. (நளன் கதையைக் கூறும் **நளவெண்பா** 13-ஆம் நூற்றாண்டில் எழுந்தது).

முன்பிருந்தே தமிழ் இலக்கியங்கள் கவிதையில்தான் தோன்றின. அம்மரபையொட்டி புராண இலக்கியமும் செய்யுளில்தான் செய்யப்பெற்று வந்துள்ளது. முதல் புராணம் தொடங்கி இந்த இருபதாம் நூற்றாண்டிலும்கூட, புராணம் என்றால் செய்யுள்தான். எனினும், புராணம் பாடிய எல்லா ஆசிரியர்களும் சந்தப் பாடல்கள் அமைப்பதிலும், சித்திரகவிகள் அமைப்பதிலும் தங்கள் திறன் முழுவதையும் காட்டியுள்ளனர். யமகம், திரிபு, மடக்கு என்பவற்றை நூல்தோறும் காணலாம். இங்கு, தோத்திரப் பாடல்களும் அதிகம் பயின்று வரக் காணலாம்.

இந்நிலையில். உரைநடையில் செய்யப்பெற்ற புராணங்களும் அண்மைக் காலத்தில் தோன்றியுள்ளன. 19-ஆம் நூற்றாண்டில் பல புராணங்கள் வடமொழியிலிருந்து நேரே தமிழில் உரைநடையாக மொழிபெயர்க்கப் பெற்றன. எடுத்துக்காட்டு: **சிவமகாபுராணம்.** மணிப்பிரவாள நடை இன்னும் பழமையானது. சைனருடைய

**ஸ்ரீபுராணம்** (15-ஆம் நூற்றாண்டு) மணிப்பிரவாள நடையில் அமைந்தது. வைணவ மரபில் பின்பழகிய பெருமாள் ஜீயர் (13-ஆம் நூற்.) செய்த **ஆறாயிரப்படி குருபரம்பரா பிரபாவமும்** பிள்ளை லோகஞ் ஜீயர் (16-ஆம் நூற்.) செய்த **இராமாநுச திவ்வியாசார்ய சரிதையும்** ஆசாரிய வரலாறு கூறும் புராணங்களென்றே கருதத் தக்கவை. இவை மணிப்பிரவாள உரைநடையில் அமைந்தவை. பின்னர் எழுந்த குருபரம்பரா பிரபாவங்கள் யாவும் உரைநடையிலேயே அமைந்தன.

**தல புராணங்களின் தோற்றம்:** ஒரு தலத்திலுள்ள சிவ அல்லது விஷ்ணு ஆலயத்தில் எழுந்தருளியுள்ள சிவபெருமான் அல்லது திருமால் புகழை விரித்துச் சொல்வது **தல புராணம்**. இது தலத்தின் பெருமையையும் அங்குள்ள மூர்த்தியின் பெருமையையும், தீர்த்தத்தின் பெருமையையும் கூறி இந்த மூர்த்தியைப் பூசித்து நற்பேறு பெற்றவர்களின் வரலாற்றையும், கடைபிடிக்க வேண்டிய தர்மங்களையும், விலக்கத்தக்கனவாகிய அதர்மங்களையும், நாட்டுச் சிறப்பு, நகரச் சிறப்பு முதலியவற்றோடு காவிய நயம்பட விரித்துரைப்பது ஒரு வகையில் மக்களுக்கு வாழ்க்கையில் மன நிறைவையும், பூர்ணமான சாந்தியையும். இறைவன் அருள் உண்டு என்ற நம்பிக்கையையும் அளித்து, அவர்களை நன்னெறிப்படுத்தி வந்துள்ளன. திருவாரூரில் பிறந்தால் முக்தி, தில்லையில் தரிசிக்க முக்தி, காசியில் இறக்க முக்தி, அருணையை நினைக்க முக்தி என்று எல்லாப் புராணங்களும் பெருஞ் சிறப்போடு எடுத்துச் சொல்கின்றன. ஆனால் எல்லாத் தல புராணங்களிலும் அந்தந்த தலத்தைத் தெரிசிக்கவும் நினைக்கவும் முக்தி என்று உறுதியாய்ச் சொல்லியிருத்தலையும் காண்கின்றோம். இதில் முரண் இல்லை. இவ்வாறு கூறியமையால் அவ்வவ்வூர் மக்களுக்குத் தங்களூர் வாழ்க்கையில் மகிழ்ச்சியுண்டாகி நாட்டுப் பற்றைத் தோற்றுவிக்கும் வித்தாயும் இருந்து வருகின்றன. இவ்வாறு எழுந்த தல புராணங்கள் நூற்றுக்கணக்கில் உள்ளன.

தல புராணம் என்று எண்ணும்போது ஒரு நிலையை மனத்தில் கொள்ள வேண்டும். 12-ஆம் நூற்றாண்டிற்குப் பின்னர் சமய அநுட்டானம் தமிழகத்தில் **மூன்று** பிரிவாக இருந்தது. ஒரு பிரிவு

அநாதி காலமாக இருந்து வந்த **சைவ சமயம்**; இது சிவாலய வழிபாடு, திருமுறை ஓதுதல் என்ற நெறியில் சென்றது. இரண்டாவது **வைணவ சமயம்**; இது திருமால் வழிபாடு; நாலாயிரம் ஓதுதல், பூர்வாசாரிய வியாக்கியானங்களைப் படித்தல் என்ற நெறியில் சென்றது. இச்சமயத்தார் அனைவரும் ஸ்ரீவைஷ்ணவர்கள். பார்ப்பனர்கள், சாத்தின முதலிகள். இவர்களிடையே சாத்தாத முதலிகளான பார்ப்பனரல்லாதார்க்கு எந்த இடமும் இல்லை. **மூன்றாவது** நெறி சங்கர அத்வைத நெறி. ஒன்பதாம் நூற்றாண்டில் சங்கரர் தோன்றி அத்வைதம் நிரூபணம் செய்த பின்னர் முன்பு சிவ வேதியராயிருந்த தமிழ்ப் பார்ப்பனர் அனைவரும் **ஸ்மார்த்த அத்வைதி**களாயினர். இவர்களுக்கு ஆலய வழிபாடு முக்கியமல்ல. ஆகவே கோயில் வழிபாடு என்று பேசும்போது பார்ப்பனரல்லாத மக்கள், சைவர்கள், கோயில் வழிபாடு கொண்டவர்களாய், தல புராணம் பாடினார்கள். ஸ்மார்த்தப் பார்ப்பனர்கள் சங்கர பாஷ்யங்களையே பற்றிக் கொண்டவர்களாய்க் கோயில் நெறியினின்றும் விலகி நின்றார்கள். ஸ்ரீ வைஷ்ணவர்களும் தங்கள் வடமொழி நூல்களையே பற்றிக்கொண்டு நாலாயிரம் தவிர வேறு வேறு தமிழ் சம்பந்தம் இல்லாதவர்களாய் வாழ்ந்தார்கள். ஆகவே தலபுராணம் செய்யும் சூழ்நிலை வந்தபோது சைவர்கள் பெருவாரியாக நூல் செய்தார்கள், பார்ப்பனர் செய்யவில்லை. ஆகவே சைவத் தலபுராணங்கள் அதிகமாகத் தோன்றின. **பார்ப்பனமே ஆதிக்கம் வகித்த வைணவத்தில்** தல புராணங்கள் தோன்றவில்லை. பார்ப்பனர்கள் செய்யமாட்டார்கள். செய்யவல்ல பார்ப்பனரல்லாத வைணவர் மிகக் குறைவு.

சைவத் தல புராணங்கள் மிகுதியாகவும் வைணவத் தல புராணங்கள் குறைவாகவும் இருப்பதற்கு இன்னொரு காரணமும் உண்டு. சிவாலயங்கள் தமிழ் நாட்டில் பல்லாயிரம்; திருமால் ஆலயங்கள் இருநூற்றுக்கும் குறைவு. இலக்கிய வரலாறு முழுமையிலும் வைணவத்தில் ஒரு பத்துத் தல புராணங்கள்தானும் காண்டல் அரிது.

ஆதியில் தமிழகத்தில் இருந்தது ஒரே சமயம். ஒரே தெய்வ வழிபாடு. அதுவே **சைவ சமயம்**; சிவ வழிபாடு. இவற்றிலிருந்து

கிளைத்தனவே பிற யாவும். **குறிஞ்சி தெய்வமான முருகனும், முல்லைத் தெய்வமான திருமாலும்** அனைவராலும் வணங்கப் பெற்றனர். காலப்போக்கில் முருக வழிபாடு சிவ வழிபாட்டோடு ஒன்றிடவே, தனித்து நின்ற திருமால் வழிபாடு தனிச் சமயமாக ஆயிற்று. தனியே திருமால் ஆலயங்கள் தோன்றலாயின. இதுதவிர, தமிழகத்தில் கிளர்ந்தெழுந்த பல்வேறு சமயங்களைத் தழுவியவர்கள் அனைவருமே சைவத்திலிருந்து சென்றவர்களே. சம்பந்தர் வரலாறும் இராமாநுசர் வரலாறும் இந்த நிலையை நன்கு விளக்கும். பண்டை நாளில் பௌத்தமும், பிற்காலத்தில் கிறித்தவமும் இஸ்லாமும், நாத்திக வாதமும் யாவும் சைவத்திலிருந்து கிளைத்தனவே. சைவத்திலிருந்து பிறமதம் புகுந்தார்களேயன்றி, பிற மதத்திலிருந்து சைவத்திற்கு வந்தார்கள் என்பதில்லை.

இதனை உணர்ந்தால் வைணவத் திருக்கோயில்கள், புராணங்கள் குறைவாக இருப்பதை உணரலாம்; உணர முடியும். அப்படியே பிறவும். சைனத்தில் புராணப் பெயரால் உள்ளவை காந்தி புராணம், மேருமந்தர புராணம், ஸ்ரீபுராணம். பௌத்தத்தில் புராணம் இல்லை. கிறித்தவத்தில் **தேம்பாவணியும்** ஒரு புராணமே. இஸ்லாம் சமயத்தில் **சீறாப்புராணமும், முகையதீன் புராணமும்** புராணங்களே. இவை அடியார் வரலாறு உரைக்கும் புராணங்களாகும்.

**மரபுகள்:** புராணங்கள் முனிவர் மரபு, அரசர் மரபு இவற்றை விரிவாகக் கூறுவன. மக்கள் தொகை குறைவாய் இருந்த காலத்தில் வாழ்க்கைத் தேவைகள் குறைவாயும் வசதிகள் பெருகியும் இருந்த அக்காலத்தில் மக்கள் இரண்டு பண்புகளையே போற்றி ஒழுகுவர். ஒன்று அறிவு, மற்றது வீரம். அறிவை வளர்த்து அதன் எல்லை கண்டோர் முனிவர். வீரத்தை வளர்த்து அதன் எல்லை கண்டு, முனிவர் உள்ளிட்ட பிற மக்கள் கவலையின்றி வாழ உதவினோர் அரசர். எனவே, புராணங்கள் முனிவர் மரபையும் மன்னர் மரபையும் மிக நீளமாக விரித்துச் சொல்லுகின்றன. இரண்டுமே வீர வழிபாட்டின் (Hero-worship) சின்னங்கள். மக்களுடைய ஒற்றுமைக்கும் வளர்ச்சிக்கும் இவ்வீர வழிபாடு தேவையாய் இருந்தது. ஆகவே இந்தக் கண்கொண்டு மரபுச் செய்திகளை நாம் காண வேண்டும்.

**புராணப் பொருள்:** புராணம் இம்மை, மறுமை ஆகிய இரண்டுக்கும் துணைபுரியக்கூடிய பொருள்களை நவில்கின்றன. புராணத்தில் குறிப்பிடப் பெறாத பொருளே இல்லை. வேதங்களில் கூறப்பெற்ற பொருளை விளக்கிக் கூறுவதே புராணம். வேள்விகள், உயிர்களின் படைப்பு, உலக அமைப்பு, யோகம், நோன்பு, நவக்கிரக மண்டலம், அவற்றின் போக்கு, சுவர்க்க நரகம், வழிபாடு, உலக அமைப்பு, மருத்துவம், நாடிவிசாரணை, மந்திரம், தோத்திரம், சகுனம் முதலான பொருள்கள் இங்கு சொல்லப் பெற்றுள்ளன. இவை பற்றிக் கவச தோத்திரங்களும் ஆங்காங்கு விரித்துச் சொல்லப் பெற்றுள்ளன. (எ-டு). **சக்தி கவசம்.** அதிவீரராமர் பாடிய காசி கண்டம். அத்தியாயம் 72, 13 பாடல்கள். துர்க்கம் என்னும் அசுரனை வதைத்த உமா தேவியைத் தேவர்கள் துதித்தது. **இலக்குமி கவசம்.** காசி கண்டம். அத்தியாயம் 5, ஏழு பாடல்கள். அகத்திய முனிவர் துதித்தது. **நாராயண கவசம்.** செவ்வைச் சூடுவார் பாகவதம். கந்தம் 6. அத்தியாயம் 4. 25 பாடல்கள்; விசுவரூபன் இந்திரனுக்கு உரைத்தது.

15-ஆம் நூற்றாண்டிற்குப் பிறகு தமிழ்நாடெங்கும் போர்கள் மலிந்து விட்டன. முதலில் இஸ்லாமியர் படையெடுப்பால் நேர்ந்த இன்னல்கள், மேலை நாட்டினர் வாணிகத்தைத் தொடர்ந்து ஏற்பட்ட போர்கள், இப்போர்களில் சாமானிய மக்களேயன்றி சிறந்த சமய வாழ்க்கை நடத்த வசதியான நிலையிலிருந்த மக்களும்கூட ஈடுபட நேர்ந்தது. இவர்கள் கையிலேந்திய படைக்கலங்களால் தங்களைக் காத்துக் கொண்டதுடன் காப்பாக ஒரு தெய்வ கவசமும் தேடினார்கள்[4]. இவர்கள் **சக்தியுணர்வே** இக்கவசம் அமைக்கும் தோட்டமாகும். இந்த நிலையில் எழுந்தனவே இக்கவசங்கள் எனக் கருதலாம். இவை முதலில் வடமொழியில் எழுந்தன; பின்னர் அந்த மரபையொட்டித் தமிழிலும் தோன்றலாயின.

---

4 உடலைப் பாதுகாப்பதற்காகப் போருக்குச் சென்ற வீரர்கள் இரும்புக் கவசம் அணிந்தார்கள். அதுபோல இறைவன் புகழைப் பகர்ந்து அவன் இன்ன இன்ன உறுப்புகளைக் காப்பானாக என்று அவன் பெயர்களையே சொற்கவசமாக அமைத்துக் கொள்ளுதல் தோத்திரக் கவசமாகும். திருவாய்மொழி பன்னிரு திருநாமப்பதிகம் (திருவாய் 2.7) ஈண்டு நினைவு கூரத்தக்கது.

***புராணத்தால் விளைந்த பயன்:*** புராணங்கள் பொதுவாக வேத ஆகமங்கள் விதித்தவற்றையும் விலக்கியவற்றையும் கதைகள் மூலமாக மக்களுக்கு உணர்த்தி நன்னெறி புகட்டுவதற்காக எழுந்தவை. கதைகளோடு விதிகளும் விளக்கமாகச் சொல்லப் பெற்றிருக்கும். புராணங்களில் எண்ணற்ற விரதங்கள் சொல்லப் பெற்றிருக்கும். ஒவ்வொரு விரதம் சம்பந்தமாகவும் அதன் இலக்கணம் யாது, அதைக் கைக்கொண்டு பெறத்தக்க பலன் யாது, அதை முற்காலத்தில் அனுட்டித்துப் பயன் பெற்றவர் யாவர், அவர் சரிதம் எத்தகையது என்ற பொருளை எல்லாம் விளக்கிக் கூறுவதே புராணத்தின் இயல்பு. தமிழ்ப் புராணங்கள் செய்யுள் நடையில் எழுதப் பெற்றிருப்பினும், அவை சாமானியக் கல்வியுள்ளவர்கட்கும் எளிதில் பொருள் விளங்கக்கூடியவை. அன்றியும் மக்களை நல்வழிப்படுத்துதலே புராணத்தின் நோக்கமாதலால் மக்கள் மனத்தைக் கவரும் பொருட்டு அவை ஒன்பது சுவைகளும் அமையும்படிச் செய்யப் பெற்றுள்ளன. ஆனால் புராணச் சொற்பொழிவு கேட்பவர்கட்கு அண்மைக் காலம் வரையில் அவற்றில் ஆராய்ச்சி உணர்வு தோன்றியதில்லை. அனைத்தையும் அவர்கள் உண்மை என்றே நம்புகின்றனர். இதனை மூட நம்பிக்கை என்று கொள்வது சரியன்று. புராணப் பொழிவு ஆற்றுவோரிடத்துள்ள சொல்லாற்றலாலும், கேட்போர் மனம் பக்குவப்பட்டுச் செல்லும் நெறியினாலும் எல்லாமே மெய் என்று நம்ப முடிகின்றது. இதனால் புராணச் சொற்பொழிவாளர் தாம் எடுத்த போதனையில் வெற்றி அடைகின்றார். பாவச் செயலில் அச்சமும் வெறுப்பும் நிகழ வேண்டும் என்ற உணர்வோடு அவர் பொழிவு நிகழ்த்துகையில் மக்கள் மனத்தில் அச்சமும் வெறுப்பும் தோன்றுகின்றன. புண்ணியச் செயலால் மகிழ்ச்சியும் எழுச்சியும் விளைய வேண்டுமென்று அவர் திட்டமிட்டால் மக்கள் மனத்தில் அதே மகிழ்ச்சியும் அப்புண்ணியச் செயல் புரிகையில் ஊக்கமும் பிறக்கின்றன. எனவே, புராணக் கதைகள் மக்களை ஊக்குவிப்பதில் சிறந்த போக்குடையவை என்பதில் சிறிதும் ஐயமில்லை. புராணக் கதைகள் பொய்யுடையவை என்று இகழ்வதாலும் பயனொன்றும் விளைவதுமில்லை. திருவிளையாடல் புராணச் சொற்பொழிவு இல்லாத

ஒரு சைவ சமயத்தையும், பாகவதக் கதைகள், இராமாயண பாரதக் கதைகள் இல்லாத ஒரு வைணவ சமயத்தையும் நாம் எண்ணிப் பார்க்க முடியுமா ? அருட் பாசுரங்கள் மக்களை ஆட்கொண்டன என்பது முற்றிலும் உண்மை. சாத்திர உணர்ச்சி சிலருக்கு மட்டுமே அறிவு விருந்தாக அமைய முடியும்.

இன்று புராணப் பொழிவுகள், இலக்கியக் கூட்டங்கள், சாத்திர நிகழ்ச்சிகள் நடைபெறும் இடங்களைக் கவனித்தால் புராணப் பொழிவுகள் நடைபெறும் இடங்களில்தான் மக்கள் கூட்டம் அதிகம் இருப்பதைக் காணும்போது மக்களுக்குப் புராணங்களில் இருக்கும் ஈடுபாட்டை விளக்க இஃதொன்றே போதுமானது.

***தல புராணங்களால் விளைந்த பயன்:*** தமிழ் நாட்டில் ஊர்தோறும் கோயில் உண்டு. '**கோயில் இல்லா ஊரில் குடியிருக்க வேண்டாம்**' என்ற பழஞ்சொல்லுக்கேற்ப ஆதிகாலத்தில் மக்கள் கோயில் என்று தாங்கள் கருதிய இடங்களில் வாழ்ந்தார்கள். வாழ்ந்த இடங்களில் புதிதாகக் கோயில்களை அமைத்துக் கொண்டனர். நாயன்மார்கள், ஆழ்வார்கள் பாடிய தலங்கட்குச் சென்றுவரத் தொடங்கினர். இவற்றால் ஒரு கோயிலைச் சுற்றிப் பல கதைகள் தோன்றலாயின. புலமை படைத்தவர்கள் அக்கதைகளையெல்லாம் தொகுத்துப் புராணங்களாகப் பாடினர்.

ஊர்தோறும் உள்ள இறைவன் திருவுருவத்தைப் பாடத் தொடங்கினர். பலர் தலபுராணம் பாடினர். 'பொய்ம்மையாளரைப் பாடாதே எந்தை புகலூர் பாடுமின் புலவீர்காள், இம்மையே தரும் சோறும் கூறையும் ஏத்தலாம் இடர் கெடலுமாம்' (7.34:1) என்ற தம்பிரான் தோழரின் வாக்கு அவர்கட்கு ஊக்கம் அளித்தது. தல புராணங்கள் கோயிலைப் பாடுகின்றமையால் கோயில் பற்றிய செய்திகளும் பெரிதும் விளக்கமாகின்றன.

நாயன்மார்கள் பல தலங்கட்கும் சென்று பதிகம் பாடினமையாலும், ஆழ்வார் பெருமக்கள் பாசுரங்கள் பாடி மங்களாசாசனம் செய்தமையாலும் பக்திமான்கள் திருத்தலப் பயணத்தை மேற்கொள்ளத் தொடங்கினர். இந்தத் தரிசன உணர்ச்சியைத் தல புராணம் பின்னும் பெருக்கியது. வடவேங்கடம்

தென்குமரி ஆயிடை எழுந்துள்ள தலங்கள் அனைத்திலும் சிறந்துள்ள சில தலங்களையேனும் சேவிக்க வேண்டும் என்று மக்கள் விரதம் பூண்டனர்.[5]

தலப்பயணம் மேற்கொள்ள முடியாதவர்கள் தில்லைக்கோ, ஆரூருக்கோ, அண்ணாமலைக்கோ செல்ல இயலுவதில்லை. அந்தந்த ஊரிலும் ஆங்காங்கு உறைகின்ற அப்பனும் அம்மையும் அங்குள்ளோருக்கு நடராசராகவும் உமாபாகராகவும் காட்சியளித்து முக்தியளித்தனர் என்று தலபுராணங்கள் கூறுகின்றன. ஆகவே வசதியற்ற மக்கள் தங்கள் கோயிலிலேயே தாம் விரும்பும் காசி விசுவநாதரையும், அண்ணாமலையாரையும், பிற மூர்த்திகளையும் கண்டு மனநிறைவு பெறுகின்றனர். ஒரு சிற்றூரில் உள்ள மக்கள் அனைவரும் இவ்வாறு வாழ்ந்த காலத்தில் தாயுமான அடிகள் கூறியவாறு **'எல்லாம் உன் உடைமையே, எல்லாம் உன் அடிமையே' (கருணாகரம்-3)** என்ற நினைவு உண்டான காலத்தில் உண்மையான ஒருமைப்பாடும் நிலைத்தது.

தல புராணங்கள் தரும் ஒரே செய்தி கடையருக்கும் இங்குக் கடைத்தேற்றம் என்பது. ஒருவன் எவ்வளவுதான் பாவம் செய்திருப்பினும், அவன் தான் செய்த பிழைக்கு அகங்குழைந்து, இந்தத் தலத்தில் இந்தப் பொய்கையில் நீராடி இந்த இறைவனை வழிபட்டால், இறையருளுக்குப் பாத்திரமாகி, பாவம் நீங்கப் பெறுகின்றான் என்றே எல்லாப் புராணங்களும் உறுதியாய்ச் செப்புகின்றன. பிற்காலத்தில் **'நாம செபம்'** என்பது ஒரு தனிப்பெருஞ் சடங்காகத் தமிழகமெங்கும் வளர்ந்துள்ளது. 13-ஆம் நூற்றாண்டு தொடங்கி 20-ஆம் நூற்றாண்டு வரை வளர்ந்துள்ள எல்லாத் தல புராணங்களும் சாத்திரங்களும் நாம செபத்தின் மகிமையைப் பெருக்கியுரைக்கின்றன.

---

5 என்னுடைய நாலாயிர திவ்வியப் பிரபந்தம் பற்றிய ஆய்வினை முன்னிட்டு வைணவ திவ்விய தேசங்கள் 108-ல் 102 திவ்விய தேசங்களைச் சேவித்து ஆறு திருத்தலப் பயண நூல்கள் எழுதி வெளியிட வாய்ப்பு ஏற்பட்டது. தற்சமயம் '108 திவ்விய தேசங்கள் - ஓர் ஆய்வு' என்ற தலைப்பில் பிஎச்டி பட்டத்திற்கு ஆய்வு செய்யும் மாணாக்கர் ஒருவருக்கு வழிகாட்டியாக அமையும் வாய்ப்பும் ஏற்பட்டுள்ளது.

நம்முடைய புராண மரபில் மக்களுக்கும் பிராணிகளுக்கும் தாவரங்களுக்கும் வேறுபாடு இல்லை. மதுரையில் இறைவன் பன்றிக் குட்டிகளுக்கு முலை கொடுக்கிறான். நரிக்குருவி முதலியன முக்தி பெறுகின்றன. தில்லையில் உமாபதி சிவம் முள்ளிச் செடிக்கு முக்தி நல்குகிறார். திருவோத்தூரில் இருந்த ஆண் பனைகள் ஞானசம்பந்தரால் பெண் பனையாக்கப் பெறுகின்றன. இந்தப் புராணக் கூற்றுகள் மனித குலத்திற்கும் உய்தி உண்டு என்று உணர்த்தத் தடை இல்லை. இந்த நம்பிக்கையினால் மக்கள் துன்பத்தில் ஆழ்ந்து விடாமல் ஊக்கத்துடன் செயல்படுகின்றனர்.

சிவபெருமான் **இறையனார்** என்ற புலவர் வடிவில் சங்கத்தில் அமர்ந்திருந்தார். சுந்தர பாண்டியனாக உருவந்தாங்கி வந்து தமிழ்நாட்டில் மதுரை மாநகரில் ஆட்சி புரிந்தார் என்பன போன்ற கதைகளும் சேர்ந்து தமிழுக்கும் இறைவனுக்கும் ஒரு நெருங்கிய தொடர்பை உண்டு பண்ணின. காஞ்சியில் **திருவெஃகா** என்ற தலத்தில் நகரைவிட்டு நீங்கிய 'கணிகண்ணன்' என்ற புலவன் பின்னே பச்சைப் பசுங்கொண்டலான திருமால் தம் பைந்நாகப் பாய் சுருட்டிக்கொண்டு செல்லுகின்றார். திருப்பரங்குன்றில் முருகன் திருமுருகாற்றுப் படைக்கு மகிழ்ந்து நக்கீரருக்கு சிறை வீடு செய்கின்றார். இவ்வாறெல்லாம் தல வரலாற்றுச் செய்திகள் இறைவன் தமிழுக்கும் பக்திக்கும் ஒளி தந்த நிலைகளையுணர்த்தி மக்களுக்கு இறையருளில் நம்பிக்கையை ஊட்டியுள்ளன.

இவையே புராணங்களின் நிலை. இவை பிற்காலத்தில் தமிழ் இலக்கியத்தில் பெரும் பகுதியாய் அமைந்துள்ளன. தமிழ் வளர்ச்சியில் எத்தனையோ நிலைகள். அவற்றுள் புராணம் மிக்க சிறப்புடையது.

# 3. வைணவ புராண இலக்கியம்

ஆறாம் நூற்றாண்டு தொடங்கித் தமிழ் மொழியில் திருமாலையே பரம்பொருளாகக் கொண்டு போற்றும் நூல்கள் எழத் தலைப்பட்டன. இக்காலப் பகுதியில் முதல் ஆழ்வார் மூவர் பாடிய மூன்று அந்தாதிகளும் தோன்ற, தொடர்ந்து 9-ஆம் நூற்றாண்டு வரையில் பல ஆழ்வார் பாசுரங்கள் தோன்றின; 9-ஆம் நூற்றாண்டில் தோன்றிய நம்மாழ்வாரின் பாசுரங்கள் தோன்றி தமிழில் வைணவ நெறியைத் தனிப்பெரு நெறியாக அமைத்தன. அந்த நூற்றாண்டில் பிறந்த **நாதமுனிகள்** தொடங்கி 1137-ல் பரமபதித்த **இராமாநுசர்** வரையில் வைணவ ஆசாரிய பரம்பரை பிறந்து வளர்ந்தது. இந்த வைணவ நெறி ஆழ்வார் பாசுரங்களைப்போல் தமிழில் கால் கொள்ளாமல் வடமொழியையே அடிப்படையாக வைத்து நூல் செய்தது; தமிழும் வடமொழியும் கலந்த **மணிப்பிரவாளம்**[1] என்ற புதிய உரைநடையை சமய வியாக்கியான நூல்களுக்காகப் பயன்படுத்திக் கொண்டது. இந்த நிலை ஓரளவுக்கு 16-ஆம் நூற்றாண்டு வரையில் தொடர்ந்து வந்தது.

9, 16-ஆம் நூற்றாண்டுகட்கு இடைப்பட்ட காலப்பகுதியில் நூல் எழுதிய வைணவப் பெரியோர் சிறந்த தமிழ்ப் புலமை பெற்றிருந்தபோதிலும், சாத்திர வியாக்கியானம், மணிப்பிரவாள உரைநடை நூல்கள் மட்டுமே எழுதினர். இலக்கியத் துறையைக் கண்ணெடுத்தும் நோக்கவில்லை. இக்கருத்துக்கு விலக்காக **வேதாந்த தேசிகர்** தமிழிலும், வடமொழியிலும் சிறு தோத்திர சாத்திர நூல்கள் பல செய்தார். **மணவாள மாமுனிகள்** தமிழில் சில தோத்திர நூல்களைச் செய்தார்.

16-ஆம் நூற்றாண்டுக்கு முந்திய நூற்றாண்டுகளில் சைவ சமயத்தில் எழுந்த சமய இலக்கிய வெள்ளம் எல்லோரையும் சமய நெறியில் ஈடுபடுத்தியது. இக்காலத்தில் எழுந்த சமயப்

---

1 இதனைச் சைனர் கண்டு தம் சமய நூல்களை இந்நடையில் அமைத்தனர்.

பேரிலக்கியங்கள் கந்த புராணம், உபதேச காண்டங்கள், திருவாதவூரடிகள் புராணம், அருணகிரிநாதர் முருகன் புகழ் பாக்கள் என்பன. இவற்றால் எழுந்த அலைகள் கரைகடந்து மோதியபோது, அம்மோதல் வைணவரையும் தாக்கியது. விழித்துக்கொண்டவர்களில் பெரும் புலவர் பலரும் தோன்றினர். இவர்கள் எக்காலத்திலும் இல்லாதவாறு வைணவச் சார்பாகப் பெரு நூல்கள் செய்தார்கள். அவை;

1. **ஸ்ரீ பாகவத புராணம்** அல்லது **இதிகாச பாகவதம்**
2. **மகாபாகவதம்** அல்லது **புராண பாகவதம்**
3. **திருக்குருகை மான்மியம்**
4. **கூடற்புராணம்**
5. **இருசமய விளக்கம்**

முதல் இரண்டும் இதிகாசம் (பாகவதம்); 3-வது தல புராணம்; 5-வது சமய விசாரமாகவுள்ளது. இனி, இவை ஒவ்வொன்றையும் விரிவாக ஆராய்வோம்.

## (1) இதிகாச பாகவதம்

பகவானுடைய வரலாற்றுக் கதைகளைக் கூறுவது **பாகவதம்.** பகவான் என்றால் வைணவத்தில் சிறப்பாய்க் குறிப்பது கண்ணபிரானை. வியாசர் செய்ததாய் வழங்கும் வடமொழிப் பதினெண் புராணங்களில் திருமால் புகழ்கூறும் புராணங்கள் **பாகவதம், விஷ்ணு புராணம், நாரதீயம், காருடம்** என்னும் நான்கு. இவற்றுள் முதலாவது பாகவதம். வடமொழியில் கண்ணபிரான் கதைகளைக் கூறும் பாகவத புராணம் ஏழு - இதிகாசம், புராணம், சங்கிதை, உபசங்கிதை, விஷ்ணு ரகசியம், விஷ்ணுயாமளம், கௌதம சங்கிதை என்றும், அவற்றுள் முதல் இரண்டுமே தமிழில் செய்யப் பெற்றன என்றும் ஆன்றோர் கூறுவர். இதிகாச பாகவதம் வடமொழியில் 18,000 சுலோகங்களில் வியாசரால் செய்யப்பெற்றது.

தமிழில் **செவ்வைச் சூடுவார்** செய்த பாகவத புராணம் இந்த இதிகாச பாகவதத்தின் மொழிபெயர்ப்பாகும். இதுவும் மூலத்தைப் போலவே **ஸ்கந்தம் 12** கந்த (ஸ்கந்த)ப் பாகுபாட்டைக் கொண்டது. பாயிரம் பின் மொத்த அத்தியாயங்கள் 155, பாடல் தொகை 4973. இந்நூல் **பாகவத புராணம், இதிகாச பாகவதம், விண்டு பாகவதம்** என்ற பெயர்களாலும் வழங்கும்.

நூல் முகப்பில் உள்ள கடவுள் வாழ்த்துப் பகுதி ஐந்தே பாடல்களைக் கொண்டது. முதலாவதான 'திருமால் வணக்கம்' எண் இடாமல் தனிக்காப்புச் செய்யுளாகவே **ஏட்டுப்படியில்** உள்ளது. பின்னர் தொடர்வன சுக முனிவர் வணக்கம், நூற்பெருமை, கலைமகள் வணக்கம், அவையடக்கம் என்பனவாகும். "இந்நூல் முழுவதும் கலைமகள் என் நாவிலிருந்து பாடிய காரணத்தால், அத்தேவியைப் போற்றி நான் ஒரு துதி சொன்னாலும் அஃது அவளே தன்னைப் பாடிக்கொண்டதாக முடியும்"[2] என்கின்றார்.

*பூம டந்தை புணர்ந்தவன் மாக்கதை*
*நாம டந்தை நவின்றன னாகலான்,*
*காம டந்தையென் றோர்கவி யான்சொலின்*
*பாம டந்தைதற் பாடிய தாகுமே*

என்பது பாடல்.

நூற்பாகுபாட்டைத் தொகுத்துக் கூறும் பகுதியாகிய **பதிகம்** என்பது அடுத்து இருத்தற்குரியது. இஃது இந்நூலின் இறுதியில் உள்ளது. இதை இவர் பாயிரம் உரைத்தது என்று 33 பாடல்களுடைய தனி அத்தியாயமாக்கி அதன்பின் 'புராண அளவை உரைத்த அத்தியாயம்' என்ற தலைப்பில் புராணங்கள் 18 என்றும் அவற்றின் சங்கியை இன்னதென்றும் கூறி,

---

2 நம்மாழ்வாரும்,
என்சொல்லால் யான்சொன்ன
இன்கவி என்பித்துத்
தன்சொல்லால் தான்தன்னைக்
கீர்த்தித்த மாயன் (திருவாய் 7.9:2)
என்று கூறியுள்ளதை ஈண்டு நினைத்தல் தகும்.

*இந்த நூலின் இசைத்ததென் காரணம் என்னில்*

*அந்தமாதி மற்று இடையிலும் ஞானமாம் அதனால்*

*சிந்தை சேரும் வெந்துயர் தவிர்த்திட இது தெரிந்தான்*

என்று சொல்லி புராண படனப் புண்ணியப் பயன் சொல்லி முடிக்கின்றார்.

இக்காலத்தில் எழுந்த பெரும் புராணங்களில் உள்ளது போல இவரும் கால அளவு, உலகளவு (நாவலந்தீவு, ஏழு தீவு, சூரிய மண்டலம், மேலுலகு, கீழுலகு, நரகம்) வருணாசிரமம் முதலான பொருள்களைப் பெருக்கிக் கூறுகிறார். பகவானுடைய வரலாறுகள் நிகழ்ந்த இடங்கள் பலவாதலால் நாட்டுப் படலம், நகரப்படலம் என்ற பகுதிகளைத் தனியே விரிக்கவில்லை. வழக்கிழந்து போன பாக்களான காப்பியத்துறையும் வஞ்சித்துறை முதலாயினவும் இதனுள் பயில்கின்றன. பாகவத புராணம் **வியாச முனிவரால்** அவருடைய புதல்வரான **சுக முனிவருக்குச்** சொல்லப்பெற்றது. இவர் **பரீட்சித்து** மன்னனுக்குச் சொன்னார். இதைப் பிற்காலத்தில் **சூத முனிவர் நைமிசாரண்ய முனிவர்களுக்குச்** சொன்னார் என்பது வரலாறு.

## நூற்பொருள்

இதனைக் கந்த வாரியாக விளக்கம் பெறுவதைக் காட்டுவோம். இதில் 12 கந்தம் அடக்கம்.

**முதல் கந்தம்:** இது 8 அத்தியாயங்களைக் கொண்டது. 'மாயவன் அம்சாவதாரம் உரைத்தது' என்பது முதல் அத்தியாயம். இதில் 22 அவதாரங்கள் கூறப்பெற்றுள்ளன. கவுமாரம், ஏனமாய் இருநிலம் எடுத்தான், 'மறைசொல் நாரதனாய் பாஞ்சராத்திரம் வகுத்தான், நரன்-நாராயணனாய் தவம் விரித்தான், கபிலனாய்த் தவம் உரைத்தான், தத்தாத்திரியனாய் பிரகலாதனுக்குத் தத்துவம் உரைத்தான், மகப்புருடன், விடபன், மீனுரு, கபடம், தன்வந்திரி, மோகினி, நரமடங்கல், வாமனன், பரசுராமன், வியாசன், தசரத ராமன், பால்வண்ணராமன், கண்ணன், புத்தன், துரகமாய் எழுவான், புராண வரலாறு, தருமபுத்திரன் அரசு பெறுதல், கண்ணன் துவாரகை அடைதல், கண்ணன் துவரை கடைந்த அத்தியாயத்தில்

கண்ணனைக் கண்ட ஆயமங்கையர் நிலை 40க்கு மேற்பட்ட பாடல்களால் விரிக்கப்பெறுதல் ஆகியவை அடங்கும். மேலும் 'ஆடவர் பெண்மையை அவாவும் தோள்' என்பன போன்ற கம்பராமாயணத் தொடர்கள் அதிகமாகப் பயின்று வருகின்றன. வஞ்சித்துறை, வஞ்சி விருத்தம், கலிவிருத்தம் போன்ற சீர்குறைந்த பாடல்கள் காணப்பெறுகின்றன. பரீட்சித்து பிறத்தல், தருமன் முதலானோர் வீடுபேறு பெறுதல், பரீட்சித்து ஆட்சி, சாபம் ஏற்றல் ஆகியவையும் அடங்கும். இவன் சிறப்பை ஆசிரியர் உணர்த்தும் முறை கவனிக்கத்தக்கது.

*தள்ளரும் கொடையினால் சார்ந்த அஞ்சிறைப்*
*புள்ளினுக்கு உயர்துலைப் புக்க வேந்துஇவன்;*
*எள்ளலில் அன்பினால் எறிந்த தூணெழும்*
*வள்ளுகிர் மடங்கலை வழுத்து தோன்றலே.*
(வேந்து - *சிபி*; தோன்றல் - *பிரகலாதன்*)

*மேதகு தயரத ராமன் மெய்ம்மையால்;*
*தீதகல் விசயன் வெஞ்சிலை யினால்இவன்;*
*ஏதமில் பொறுமையால் இனிய பார்மகள்;*
*ஓதிய தாய்உல குயிர்பு ரத்தலால்*
(விசயன் - அர்ச்சுனன்; பார்மகள் - பூமாதேவி)

**இரண்டாம் கந்தம்:** இது 3 அத்தியாயங்களைக் கொண்டது. **சுகர்** திருவாயினின்றும் தத்துவ அமுதம் சுரக்கின்றது. மாயவனிடத்து ஈடுபடாத கண், மூக்கு, கைகள், நா, தலை, உளம், கால், செவி என்பன பயனற்றவை என்று காட்டப் பெறுகின்றன.[3] இக்கந்தத்தின் முதற்பாடல் இது.

*இறந்தொழிந் ததுவெங் கூற்றம்*
*என்றுளத் துணர்ந்தார் போலும்*

3 அப்பர் அடிகளின் திருஅங்கமாலை (4.9) ஈண்டு நினைவு கூர்ந்து மகிழத்தக்கது. உடலுறுப்புகள் யாவும் இறைவனைத் தொழுவதற்காகவே என்ற கருத்து எல்லா அருளாளர்களிடமும் காணப்படுகிறது.

அறந்தலை மணந்த செங்கோல்
ஐவர்பால் ஏழும் காப்ப
நறுந்துழாய் பகவன் தூது
நடந்ததாட் கமலப் போது
மறந்தனர் மாக்கள் வாளா
வருபகல் கழிகின் றாரே.

கையும் நாவும் பற்றி விளக்கும் பாடல்:

இடிகுரல் யானை வெண்கோடு
இறுத்தவன் இணைப்பெற் றாளின்
கடித்துணர் புனையாக் கைகள்
கையது கைக ளாமால்;
பொடித்தசெங் கதிர்போற் காந்தி
பொழிமணிச் சூட்ட ரவின்
நடித்தவன் நாமம் பாடா
நாவழுங் காத நாவே.

என்பதாகும்.

**மூன்றாம் கந்தம்:** இது 9 அத்தியாயங்கள் கொண்டது. விதுரனுக்கு உத்தவர் கண்ணன் சரித்திரம் கூறுதல், மைத்திரேயர் விதுரனுக்குத் தத்துவம் உரைத்தல், பிரமன் தோற்றம், காள அளவு, சனகாதியர் தோற்றம், வராக அவதாரம், தேவர் தோற்றம், கபிலர் பிறப்பு, கபிலர் தத்துவம் உரைத்தது (சாங்கிய நூல்), சுகமுனி தத்துவம் உரைத்தது (9:3), விதுரர்க்குத் தத்துவம் உரைத்தது (3:2) போன்ற அத்தியாயங்கள் தத்துவங்களின் தோற்றம், இயல்பு முதலியன கூறும் சமயப் பகுதிகளாகும்.

**நான்காம் கந்தம்:** இதில் 6 அத்தியாயங்கள் உள்ளன. மரீசி முதலியோர் படைப்பு, தக்கயாக சங்காரம்; தக்கயாக சங்காரத்தில் போர் வருணனையைக் காணலாம். இங்கு சிவபெருமானின் சிறப்புகள் மிக அழகாகவும் சுவைபடவும் நுவலப் பெற்றுள்ளன. அதனுள் முருகன்

அவதாரமும் அழகாக அமைந்துள்ளது. துருவன், பிருது மன்னன் முதலியோர் வரலாற்றில் இரண்டு பாடல்கள்: துருவன் திருமாலைக் காண்கின்றான்.

*மண்டலம் நிறைந்த திங்கள்*
*வதனமும் கமலக் கண்ணும்*
*குண்டலம் சுடரும் காதும்*
*குறுநகைப் பவள வாயும்*
*தண்துழாய் அலங்கல் மார்பும்*
*தடக்கையோர் நான்கு மாகக்*
*கண்டனன் மறையும் காணாக்*
*கரியவன் உருவம் அம்மா.*

*வானே, வளியே, வயங்கொளியே,*
*வனமே, மண்ணே, இவ்வைந்தின்*
*ஊனே, உயிரே, உயிர்க்குயிரே,*
*உன்னும் உறுவர் உளத்தூறும்*
*தேனே, நங்கள் பெருவாழ்வே,*
*சிவனே, அயனே, இருவருக்கும்*
*கோனே, நின்னைக் குணமில்லேன்*
*குறித்தேன் சொல்லிப் பழிச்சுக்கோ?*

**ஐந்தாம் கந்தம்:** இது 8 அத்தியாயங்கள் கொண்டது. பிரியவிரதன் மரபு, பரதன் வரலாறு, நாவலந்தீவு, கங்கையில் பிதிர்க்கடன் செய்வதால் வரும் நற்பயனைக் கூறும் பாடல் (1233);

*புலங்கொள் சங்கம்வை கங்கதும்*
*பொருந்திய நாகம்*
*நலங்கொ ணாரத முதலிய*
*நல்வரைக் குலங்கள்*
*துலங்கு மேருவின் சுற்றிலும்*
*கமழுமால், துகள்தீர்த்து*

*இலங்கு நற்பொருட் டருகுசூழ்*
*கேசர மெனவே*

பிற தீவுகள், கடல், சூரிய மண்டலம், மேலுலகு, கீழுலகு, நரக இயல்புகள் இவை பற்றிய செய்திகளும் காணலாம்.

**ஆறாம் கந்தம்:** 9 அத்தியாயங்கள் கொண்டது. அசாமிளன், தக்கன், விசுவரூபன் வரலாறுகள் விவரிக்கப் பெற்றுள்ளன. அசாமிளன் கதையில் '**நாராயண**' என்ற நாலெழுத்தின் பெருமையைப் பல பாடல்கள் பகர்கின்றன. அவற்றுள்,

*பத்திசெய் தாயினும் பகைசெய் தாயினும்*
*வித்தக னொருவன்பேர் விளம்பற் காயினும்*
*ஒத்துநா ராயணா எனஉ ரைப்பரேல்*
*கொத்துவெம் பாதகங் குலைந்து நீங்குமே.*

*தும்மினும் இருமினும் துயர மிக்குளம்*
*விம்மினும் வீழினும் வினைசெய் போதிலும்*
*அம்மஇன் நாலெழுத் தறைவ ரேல்,அவர்*
*செம்மலர் மால்பதம் சேர்தல் திண்ணமே.*

இவை இரண்டு பாடல்கள். இந்திரன், விசுவரூபன் உபதேசித்த '**நாராயண கவசம்**' தாங்கியமையால் (செயித்தமையால்) அவுணரோடு செய்த போரில் வெற்றி பெற்றான். நாராயண கவசம் ஒரு தனி அத்தியாயம்; கவசம் மட்டும் 26 பாடல்கள். நாராயணனுடைய வடிவங்கள், உறுப்புகள் ஒவ்வொன்றும் காக்க என்று சொல்வது; அடியிற்கண்ட இரண்டு பாடல்கள் எடுத்துக் காட்டுகள்.

*புகழ்பெறு மீனுரு வெடுத்த புங்கவன்*
*அகமகிழ் தந்துநீ ரடைந்து காக்க;இச்*
*சகமிசை வாமனன் சார்ந்து காக்க;வேர்*
*மிகுநிலம் அளந்தமால் விசும்பிற் காக்கவே.*

*பன்னிய வரைமுதற் பலஅ ரண்களில்*
*துன்னுவெம் சமத்திடைத் தோன்ற லுற்றுமுன்*
*மன்னுவெம் கனகனை மாய்த்த மைந்துடை*
*நன்னலம் சேர்தர மடங்கல் காக்கவே.*

பின்னர் இந்திரன், விருத்திரன் முதலியோரை அழித்தல், அந்த பிரமகத்தியைப் போக்கியது, சித்திரகேது, மருத்துகள் ஆகிய வரலாறுகள் தொடர்கின்றன.

**ஏழாம் கந்தம்:** 4 அத்தியாயங்கள் கொண்டது இது. சிசுபாலன் வீடுபேறு, இரணிய வதம், இரணிய வதத்தின் பின்னர் பிரகலாதன் துதி 10 பாடல்கள் அமைகின்றன. அவற்றுள்,

*விழைவற வெறிந்தார் நாடும்*
*விழுப்பெருஞ் சுடரே, தூய*
*பழமறைக் கொழுந்தே, பச்சைப்*
*பசும்புயல் வண்ணா, நின்னை*
*வழிபடு மன்பே யன்றி*
*வரமெவன் பெறுவ தென்னாத்*
*தொழுதனன் வழுத்த லுற்றான்,*
*தூயபே ரறிஞ னம்மா.*

*பூவுறை மணம்போ லெல்லாப்*
*பொருளிது முறைவாய், நின்பொன்*
*சேவடி தொழுது போற்றார்*
*தேவரே யேனும் நீசர்*
*ஆவர்;பொல் லாத நீச*
*ராயினும் வணங்கி நின்சீர்*
*நாவினால் வழுத்தில் தேவ*
*நாயகர் நாத ராவார்.*

என்பவை இரண்டு பாடல்கள். தொடர்ந்து வருணாசிரமம், இல்லற இயல்பு இயம்பப் பெறுகின்றன.

**எட்டாம் கந்தம்:** இது 8 அத்தியாயங்கள் கொண்டது. மனு கசேந்திரன் பற்றிய வரலாறுகள் தொடங்குகின்றன. கசேந்திரன் வரலாற்றில் யமகம், திரிபு அமைந்த பாடல்கள் அதிகம். பாற்கடல் கடைந்தது, தேவாசுரப் போர், மோகினி உருக்காட்டியது, வைவச்சுதன், வாமனாவதார வரலாறுகள் தொடர்கின்றன. வாமனாவதாரப் பாடல்களின் யாப்பு கம்ப ராமாயணத்தில் இதே பகுதியை நினைவூட்டும். அடுத்து வருவது மச்சாவதார வரலாறு. இதில் மோகினியைப் பற்றிக் கூறியவிடத்து கனலுமிழ் கணிச்சியான் கூறியபடி புருடோத்தமன் மோகினி வடிவம் எடுப்பதை 12 பாடல்கள் விவரிக்கின்றன. மோகினியைக் கண்டு பிஞ்ஞகன் மயங்குகின்றான் என்பதையும் சுவைபட அமைக்கின்றார் ஆசிரியர். 'மாயோன் பிழிந்து கொள்வனைய சொல்லிப் பெண்ணுருவெடுத்து நின்றான்';

*பிறையும் வில்லுமொத் திலகிய*
*திருநுதற் பேதை*
*அறையும் வண்டிமிர் அணிமலர்த்*
*தடஞ்சினை தோலும்*
*மறையு மாற்றரு மாதர்மீ*
*தூரமுக் கண்ணன்,*
*இறையும் நாணிலன்; பின்செலும்*
*இருங்களி றேய்ப்ப,*

*நெறிந்து நெய்கனி குழலுமை*
*நகுவது நினையான்*
*பொறுத்த கங்கையாள் புன்னகை*
*காட்டலும் கருதான்,*
*அறற்க ருங்குழல் பற்றினன்*
*அங்கையாற் றழுவ,*
*எறிக்கும் சேயிழை மின்னெனக்*
*கைப்படா திலகும்,*

இவற்றை அடுத்து வருவது கவிஞர் கூற்று:

கொன்றை சூடும் குழகனும் இவ்வகை
ஒன்று காமம் உழந்தனன் என்னின்,யார்
வென்றி வேல்விழி யார்மயில் வெல்பவர்?
என்று வேந்துக் கிருந்தவன் ஓதினான்

என்பது காண்க.

**ஒன்பதாம் கந்தம்:** இதில் அடங்கியவை 18 அத்தியாயங்கள். சிவன், சையாதி, அம்பரீடன், இக்குவாகு, அரிச்சந்திரன், சகரன், பகீரதன், கன்மாடபாதன் இவர்களின் வரலாறுகள் வருகின்றன. அடுத்து இராமாவதாரமும், இராமன் தன்னுடைய அடிச்சோதிக்கெழுந்தருளிய வரலாறும், இராமாயணம் முழுமையும் 137 பாடல்களால் அமைகின்றன; தொடர்ந்து 16 பாடல்களில் உத்தர காண்டம் அமைகின்றது. நூல் கண்ணன் வரலாற்றை விரிப்பதாக அமைவதால் பிறவற்றின் விரிவுக்கு இவண் இடம் இல்லை. பின்னர் நிமி, சந்திரன், பரசுராம விசுவாமித்திரர், யயாதி, பூரு, சந்தனு, அனுமரபு, எதுமரபு ஆகியவை அமைகின்றன.

**பத்தாம் கந்தம்:** 54 அத்தியாயங்கள் கொண்டது. அனைத்துக் கந்தங்களிலும் பெரியது இது; 1682 பாடல்களைக் கொண்டது. இப்பகுதி கண்ணன் திருவவதாரம் முதல் கண்ணனுடைய இறுதிக் காலத்தில் துருவாசர் சாபத்தினால் யாதவர்கள் தங்கள் முடிவுக்குக் காரணமான இருப்புலக்கை பெறுகிற வரையில் உள்ள கிருட்டிணாவதாரக் கதையை விரித்துச் சொல்கிறது. கண்ணனுடைய பால விளையாட்டுகள் யாவும் தனித்தனி அத்தியாயமாக விரித்துப் பேசப்பெறுகின்றன. நூலுக்கு அமைந்த 'பாகவதம்' என்ற பெயரே இந்தக் கந்தத்தை வைத்தே வந்ததாகும். தேவகி கருவில் திருமால் தங்குகிறான். தேவகி திருவயிறு அந்த ஆலிலை போலும் உள்ளதாக நினைத்து வந்தனன் போலும். பூதனையின் பாலை அருந்த அவள் வீடுபேறு அடைகின்றாள். சகடத்தை உதைத்து சாக அடிக்கிறான். மண் அருந்தின கண்ணனை யசோதை வந்து பார்க்க, அவள் காண்பது என்ன ?

'நங்காய்மண் அருந்தினன்நின் மதலை'என
'இல்லை'என நவின்றா னாக
கொங்கார்ந்த செழுங்கமலக் கோற்றொடிகை
பற்றினள்,வாய் காட்டு கென்ன,
அங்காந்த மணிவண்ணன் அம்பவளத்
துவர்வாயி னழகு காணும்
செங்காந்தள் முகிழ்விரலந் தீங்கிளவி
உலகனைத்தும் தெரியக் கண்டாள்

விண்கண்டாள் விண்வளைக்கும் வெங்கதிருந்
தண்சுடரும் விளங்கக் கண்டாள்;
மண்கண்டாள், மண்வளைந்த மாகடலும்
மேருயர்மால் வரையும் கண்டாள்;
தண்கொண்ட வெண்கோட்டுத் தவளநெடு
வளங்கண்டாள், தளையும் கண்டாள்;
பண்கொண்ட வண்டரற்றும் பழந்துளவோன்
இவன்எனவே பரவி னாளால்.

முருகொழுகு முகிழ்விரியும் மொய்துளவோன்
மாயையினான் மறைத்த லோடும்
பருகுவனள் போனோக்கிப் பழுத்தொழுகும்
அன்பினளாய்ப் பராவி அன்னை
பொருகளிறு வருக,வளர் போரேறு
வருக,எழிற் பூவை வண்ண!
வருகவெனத் துகரில்விளை மணிமுத்தங்
கொண்டனள்,உண் மகிழ்வு பூத்தாள்

அற்புதமான பாடல்கள். பாலகிருட்டிணனின் காட்சி உள்ளத்தைத் தொடுகின்றது.[4]

---

4 குலசேகராழ்வாரின் '**பெருமாள் திருமொழி**'யிலுள்ள 'தேவகி புலம்பல்' (7) என்பதிலுள்ள பாசுரங்களை ஒப்புநோக்கி மகிழ்தல் தகும்.

இன்னும் பல காட்சிகள்; மருதிடைத் தவழ்கின்றான். மலரவன் கவர்ந்த சிறார்களையும் கன்றுகளையும் மீட்கின்றான். காளிங்கன் மீது நடனம் ஆடுகின்றான். வேய்ங்குழல் இசைக்கின்றான்.[5] கோவர்த்தனகிரி எடுக்கின்றான்.[6] கோபியரை மணக்கின்றான். ஆசிரியரான சாந்தீபினி முனிவரின் மைந்தனை மீட்டுத் தருகின்றான்.[7] சத்தவனைக் கோகுலத்திலும் அக்ரூரனை அத்தினாபுரத்திலும் விடுத்து, சராசந்தனை வதைக்கின்றான். முசுகுந்தனுக்கு அருள் புரிகின்றான். உருக்குமிணி திருமணம் நடைபெறுகின்றது. பிரத்யும்நன் பிறக்கின்றான். சத்தியபாமை திருமணமும் நடைபெறுகின்றது. சததன்னு வதம், காளிந்தி மணம், பின்னும் பலர் மணங்கள், நரகாசுர வதம், பிரத்யும்நன், அநிருத்தன் மணங்கள், நிருதனுக்கு அருள் புரிதல், பலராமன் கோகுலம் அடைதல், பவுண்ட்ரன் வதம், சாம்பன் மணம், பதினாயிரம் கோபியரோடு விளையாடல், தருமபுத்திரன் செய்த இராசசூய யாக முடிவில் அக்கிர பூசை யாருக்குச் செய்வதென சிந்திக்கும்போது கண்ணனே அக்கிர பூசைக்குரியவன் என்று சகதேவன் துணிந்துரைத்தல்:

பூப்பவன் றானும் பூவாப்
　　　பொழிலெலாம் பூத்து நின்ற
காப்பவன் றானும் ஊழிக்
　　　கடையினிற் கனலும் தீயால்
தீப்பவன் றானும் ஆயர்
　　　தேமொழி மாதர் கொங்கை
கூப்பிடத் தூசு வாரிக்
　　　குளிர்மரத் திவர்ந்த கோவே

5 பெரியாழ்வார் திருமொழி - 'கண்ணன் குழல் ஊதல்' (3.6) நினைவிற்கு வருகின்றது.

6 மேலது. 'கோவர்த்தனகிரியைக் குடைகொண்டமை' (3.5) நினைந்து மகிழத்தக்கது.

7 பெரியாழ்வார் திருமொழி 4.8:1-ல் வரும் க்தை

உடலெலாம் கண்ண னன்றி
யொன்றிலை உணருங் காலை
கவலமா மயிலெ ருத்திற்
கவின்கனிந் தொழுகு மேனி
மலர்துழாய் அலங்கல் மாலை
மாயனுக் காற்று பூசை
அலர்தலை யுலகுக் கெல்லாம்
ஆற்றிய பூசை யாமால்

என்ற பாடல்களால் சகாதேவனின் துணிவினைக் காணலாம்.

சகாதேவன் உரைத்த மாற்றத்தைப் பொறாது போருக்கெழுந்த சிசுபாலனைக் கண்ணன் கொல்லுகிறான். சாலுவன் வதம், தந்தவக்கிரன் வதம் ஆகியவை தொடர்கின்றன.

பலராமன் தீர்த்த யாத்திரை பகரப் பெறுகின்றது.[8] இங்கு இவர் பல இடங்களைச் சுட்டியுரைக்கின்றார்.

தெண்டிரை நிலத்தொரு
திலக மாகிய
தண்டமிழ் நாட்டகம்
சார்ந்திட் டானரோ

என்பதால் இது பெறப்படும். பெண்ணை, பம்பை இவற்றில் தீர்த்தமாடிய பிறகு முருக வழிபாடு கூறப் பெறுகின்றது. சயிலம் பணிந்த பிறகு, தமிழ்நாடு, வேங்கடமலை, காஞ்சி, துளவப் படலை தாழ்மார்பன் கண்வளர் கோயில் (திருவரங்கம்), காவிரி, சிலம்பாறொழுது பூஞ்சோலை (திருமாலிருஞ்சோலை மலை), மதுரை வளநகர், வடித்த தீந்தமிழ் தண்துறைதொறும் மணக்கும் வையை, சேது, குலாசலம், (பொதியில்), பொருநை, கன்னியந்துறை (குமரி), திருவனந்தபுரம்,

---

8 வில்லி பாரதத்தில் பார்த்தனின் தீர்த்த யாத்திரை பகரப் பெறுவது போல, இங்கும் தமிழகத்தின் சுற்றுலா போல் காட்டப் பெறுகின்றது. பல்வேறு இடங்கள் சுட்டி விளக்கப் பெறுகின்றன.

யதுகிரி[9] கோகன்னம் ஆகிய தலங்களும் நதிகளும் குறிப்பிடப் பெறுகின்றன. குசேலருக்கு அருள் புரிகின்றான். இருபது பாடல்களில் மிகச் சுருக்கமாக குசேலருடைய பக்திப்பெருக்கு காட்டப் பெற்றுள்ளது.[10] குசேலன் நம்மைப்போல் செல்வ நாட்டம் உடையவன் அல்லன். இல்லக்கிழத்தி ஏவக் கண்ணனை நாடி வந்தான் எனக் கருதிய கண்ணன் அவன் அன்புடன் கொணர்ந்த 'அவலை' எடுத்து வாயில் இட்டுக் கொள்கின்றான். ஒருமுறை எடுத்தவுடன் குசேலரின் இல்லத்தில் இந்திரச் செல்வம் நிறைகின்றது; இரண்டாம் முறை எடுக்கும்போது உருக்குமிணி தடுத்து விடுகின்றார். கையில் செல்வம் எதுவும் தராமையால், 'பொருள் கொடுப்பின் இவன் தன்னை மறந்துவிடுவதற்கு ஏதுவாகுமென்று' கண்ணன் தரவில்லை போலும் என்று குசேலன் கருதி அமைதியுடன் வெறுங்கையுடன் திரும்புகின்றான்.

*அம்ம உய்ந்தனம் உய்ந்தனம்*
*அரும்பொருள் எய்தின்*
*மம்மர் கூர்தர மறக்குவன்*
*நமையென மதித்தே*
*மும்மை சாலுல களித்தருள்*
*முளரியஞ் செங்கட்*
*செம்மல் நல்கலன் செல்வமென்*
*றுவந்தனன் சென்றான்*

என்ற பாடல் இதனைக் காட்டுகின்றது.

சமந்த பஞ்சகம் செல்லல், இறந்த குழந்தைகளை மீட்டல், சுபத்திரையை அர்ச்சுனன் மணத்தல், சனந்தனர் சனகாதி முனிவர்க்குச் சுருதி கீதையுரைத்தல் விரித்துரைக்கப் பெற்றுள்ளன.

---

9 யதுகிரி - திருநாராயணபுரம். இதுபற்றிய பாடல் (4102) ஏட்டில் இல்லை என்பது பதிப்பாளர் குறிப்பு.

10 இந்த இருபது பாடல்களே பின்னால் '**குசேலாபாக்கியானம்**' பாடுவதற்கு கைகொடுத்து உதவியுள்ளன.

சுருதி கீதையின் சாரம்:

பகைத்து நாடுநர் பற்றுமாறு அற்றுணை
அகத்து நாடுந ராய விருவரும்
நிகர்த்துன் சேவடி நீள்வந் துற்றனர்
மிகுந்த நின்னிலை உள்ளவல் லேரெகாலே.

என்பது. விருத்திராசுரன் வதம், பிருகு முனி சென்றது, மறைந்த குழந்தைகளை அந்தணனுக்கு மீட்டுத் தந்தது, புனல் விளையாட்டு என்ற பகுதிகளோடு பத்தாம் கந்தம் முடிகின்றது. புனல் விளையாட்டு சண்டையில் முடிந்து யாதவர் மடிவது பின்னர் விரிக்கப்பெறும். (அடுத்த கந்தத்தில்)

**பதினோராம் கந்தம்:** 18 அத்தியாயங்கள் கொண்டது. யாதவன் சாம்பன் உலக்கை பெறுதல், வசுதேவர்க்கு நாரதர் உலக நிலையாமையையும், கண்ணனின் தத்துவமும் உரைத்தல் பகுதிகள் அமைகின்றன. பின் பல அத்தியாயங்கள் ஞானப்பகுதி, வருணாசிரமம், இயமநியமம், பூசனை என்பன அமைகின்றன. கண்ணன் தன்னுடைய அடிச்சோதிக்கு எழுந்தருளிய செய்தியுடன் இந்தக் கந்தம் நிறைவு பெறுகின்றது. கண்ணன் போனபின் துவாரகையைக் கடல் கொண்டது.

கருமுகி லனையஅக் கண்ணன் பின்தொடர்ந்து
இருவிசும் பேகிய விசையும் மெய்ம்மையும்
தருமமும் பொறுமையும் தவமும் தானமும்
மருவின தவனியின் மறஞ்செய் வெங்கலி.

காலமும் பிறிதொரு கலப்பு மற்றுயர்
சீலமு மானவன் செய்கை இந்திர
சாலமும் அவைக்களஞ் சான்ற கூத்தினர்
கோலமும் அல்லதென் கூறல் வேண்டுமால்.

**பன்னிரண்டாம் கந்தம்:** 10 அத்தியாயங்கள் கொண்டது. கலி தன்மம் உரைத்தல், கற்கியவதாரம், பிரளயம், பரீட்சித்து வீடுபேறு அடைதல், சனமேசயன் சர்ப்ப வேள்வி செய்தல், வேதம் நான்கு என்ற

பகுப்பு - ஆகியவை அடக்கம். மார்க்கண்டேயர் தவம் செய்து திருமாலை வேண்ட, சிவபிரான் தோன்றி மாயனும் நாமும் வேறல்ல என்று வரங்கொடுக்கிறார். பின் சூரிய துதி வருகிறது. இறுதியில் தொடக்கத்தில் சொல்லியவாறு பாயிரம் உரைத்தது என்னும் பதிகப் பகுதியும் புராணங்களின் அளவும் கூறப்பெறுகின்றன. நூலின் இறுதிப் பாடலில் ஆசிரியர் நூல் கற்போருக்கு வாழ்த்து கூறுகின்றார்.

*கனைத்துவண் டிமிர்துழாய்க்*
*கண்ணன் மாக்கதை*
*மனத்துற வழங்குநர்*
*மகிழ்ந்து கேட்குநர்*
*வினைத்திருக் கற்றுறு*
*மெய்ம்மை யாதியா*
*நினைத்தன பெற்றிவண்*
*நீடு வாழியே.*

என்பது காண்க.

செவ்வைச் சூடுவார் சிறந்த பக்தியோடும் புலமையோடும் புராணத்தை நடத்திக்கொண்டு செல்கிறார். அலங்காரங்களிலோ வருணனைகளிலோ, காவியச் சுவை வேண்டும் என்பதிலோ இவர் தம் கருத்தைச் செலுத்தவில்லை. இவர் கூறும் கதைகளும் வரலாற்று முறையில் இல்லை. ஆங்காங்கு முனிவர்கள் வினாவ, சூதர் சொல்லுவதாகக் கதைகளை அமைத்துள்ளார். அவதாரங்கள் வைப்பு முறையைப் பார்த்தால் இது விளங்கும். முதல் அவதாரமாகிய மச்சாவதாரம் இறுதியில் வருகிறது. பிற யாவுமே இதற்கு முன்னர் சொல்லப் பெறுகின்றன.

திருமால் பக்தி இவரிடம் அழகாக விரிந்த சமயப் பொது நோக்காக அமைந்துள்ளது. நெறியாக அமையவில்லை. இந்த இயல்பை நூல் முழுதும் காணலாம். மோகினியுரு எடுத்த கதை இத்தன்மைக்கு எடுத்துக்காட்டாகும். மேலும் தக்க யாகத்தின் அழிவு கூறிய இடத்தில் சிவ பரம்பொருள் என்ற தன்மைக்கு மாறுபடாமல் பாடுகிறார். பின்வரும் இரு பாடல்களிலும் காணத்தக்கது.

*விரிசினை யால நீழல்*
*மெய்த்தவச் சனக னாதி*
*அருமறைக் கிழவர் சூழ*
*அமர்ந்தவா னந்த ருபத்*
*தொருமுத லவனைக் காணா*
*உவந்தனர் அமரர் தாழ்ந்தார்*
*மரைமலர்ப் பொருட்டு வாழும்*
*மறையவன் வழுத்தி னானால்.*

*ஆவயி னாரன் மீனோர்*
*அறுவர்வந் தன்பு முற்றித்*
*தீவிய முலைப்பா லூட்டத்*
*திருமுகம் ஆறு கொண்டு*
*மேவிய மடவார் கொம்மை*
*வெம்முலை யொருங்கு மாந்தி*
*மூவிரு முகனென் றெல்லா*
*உலகமும் மொழிய நின்றான்.*

மார்க்கண்டேயன் தவம் உன்ரத்த இடத்தும் சிவபிரான் தமக்கும் மாயனுக்கும் வேறுபாடு இல்லை என்று கூறுவதாக இவர் பாடுவதும் ஆழ்ந்து நோக்கத்தக்கது.

**காலம்:** 16-ஆம் நூற்றாண்டின் தொடக்கம் (1500-1525)

## (2) புராண பாகவதம்

**ஆசிரியர்:** நெல்லி நகர் **அருளாளதாசர்.** இவர் நெல்லி நகர்க்கதிபதி. இவர்தம் இயற்பெயர் **வரதன்; வரதராச ஐயங்கார்** எனவும் வழங்கும். குணச்சிறப்பினாலும் **அருளாளதாசர்** என வழங்கப் பெற்றார். அளவாற் பெரிய பாகவத புராணத்தைத் தமிழில் மொழிபெயர்த்துச் செய்தவர். இந்நூல் 9147 பாடல்களைக் கொண்டது.

இதன் சிறப்புப் பாயிரம்:

எதுகுலத்து வருமுறையோன்
சரிதையைநற் சுகன்இசையால்
உதவும்சொலைத் தமிழினால்
உரைத்தவன் திருவரங்கம்
பதியமர்வேத் திரக்கரத்தோன்
பழமறையோன் வரதன்நெல்லிக்
கதிபதியாய் உயர்ந்திடுபே
ரருளாள நாதனரோ (1:53)

என்பது. இப்பாடலால் இவர் திருவரங்கத்தில் வாழ்ந்தவர் என்றும், இவர் 'வரதன்' எனப்படும் 'அருளாளநாதன்' என்று பெயர் பெறுகின்றார் என்றும் அறிகின்றோம்.

இதற்கு அடுத்த பாடல் நூல் செய்த காலம் கூறுவது. அப்பாடல் இவரை நெல்லிநகர் வரதராசன் என்றும், நூலை 'வாசுதேவ கதை' என்றும் கூறுகின்றது. **வாசுதேவன்**-வசுதேவர் புதல்வனான கண்ணன். **பாகவதம்** - பகவானுடைய கதையைச் சொல்வது; **பகவான்** - கிருட்டிண பகவான். இப்பாகவதம் கிருட்டிண பகவான் கதையையே அதிகமாய்ச் சொல்வதால் 'வாசுதேவ கதை' என்று பெயர் பெற்றது; நூலின் பல இடங்களில் இந்நூற்பெயர் 'வாசுதேவ கதை' என்றே சொல்லப் பெறுகின்றது.

நூலின் இடையிலும் இந்தக் கதையை வடமொழிப் பதினெண்ணாயிரம் சுலோகங்களைத் தமிழில் நெல்லிவரையன் 9,000 விருத்த யாப்பில் சொன்னான் என்று பாடல் பகர்கின்றது (14:5). பாடல் இது:

இதுவலால் உருக்கு மிணிக்குநா ரதன்தான்
இசைத்ததை நைமிசா ரணியத்து
அதிற்சவு னகனே முதல்வரெண் பத்தெண்
ணாயிநர் முனிவர் கேட்பச்
சதுர்மறைச் சூதன் உரைத்திடும் நூல்சுலோக
மாம்பதி னெண்ணா யிரமும்
விதிதமிழ் நெல்லி வரதையன் சொன்னான்
விருத்த மொன்பான் சகசிரமே.

வடமொழிப் புராண பாகவதம் வியாசர் செய்தது. 3600 சுலோகங்களுடையது. **மகா பாகவதம்** என்று இது வழங்கும். இதில் 25 கீதைகள் உள்ளன. ஆறு அவதாரக் கதைகள் இதில் நுவலப் பெறுகின்றன. பெரும்பாலும் அனுட்டுப்புச் சுலோகத்தாலும் சிறுபான்மை பிறவற்றாலும் செய்யப் பெற்றுள்ளது. அத்தியாயம் 600. அத்தியாயம் ஒவ்வொன்றின் தலைப்பிலும் ஒரு கடவுள் வாழ்த்து உண்டு. நாரத முனிவர் உருக்குமிணிப் பிராட்டியாருக்கு இதனைச் சொன்னார். பின்னர் பரீட்சித்து மன்னனுக்கு இது சுக முனிவரால் சொல்லப் பெற்றது. இதுவே பதினெண் புராணத்துள் ஒன்று என்பர். இதனையே தமிழில் **அருளாளதாசர்** பாடினார்.

வரதராச ஐயங்கார் என்றும் சொல்வதைக் கேட்டுள்ளோம். ஐயங்கார் என்பது பிற்கால வழக்கு. 17-ஆம் நூற்றாண்டில் பல பிரபந்தங்கள் பாடிய அழகிய மணவாளதாசர் **பிள்ளைப் பெருமாள் ஐயங்கார்** என வழங்கப்பெறுகின்றார். இதற்குமுன் இச்சொல்லுக்குச் சிறப்பான ஆட்சி இருந்ததாகத் தெரியவில்லை. வரதன், வரதராசன், வரதையன் என்றே இவர் பெயர் வழங்கப்பெற்றது. 16-ஆம் நூற்றாண்டுக்குப் பின் '**ஐயங்கார்**' என்ற சொல்லாட்சி பெருகிவிட்டபடியால் 'ஐயன்', 'ஐயங்கார்' ஆகிவிட்டார் போலும்.[11] பாடல்கள் பகரும் வரதர் எப்படி **அருளாளதாசர்** ஆனார் என்பது தெரியவில்லை. '**தாசர்**' என்று பெயர் சூட்டிக் கொள்வது அக்காலத்தில் வைணவத்தில் ஒரு சிறப்பாகக் கருதப்பெற்றது போலும். பிள்ளை உறங்கா வில்லிதாசர் (12-ஆம் நூற்றாண்டு) கூர குலோத்துமதாசர் (14-ஆம் நூற்றாண்டு), அரிதாசர் (16-ஆம் நூற்றாண்டு), மணவாளதாசர் (17-ஆம் நூற்றாண்டு) முதலான வழக்குப் பெயர்களை நோக்கினால் இவ்வுண்மை ஒருவாறு தட்டுப்படும்.

**நூல்:** இத்தமிழ் பாகவத புராணம் '**வாசுதேவ கதை**' என்றும் '**புராண பாகவதம்**' என்றும் பெயர் பெறும். 132 படலங்களும் 9147 பாடல்களும் கொண்டது. செவ்வைச் சூடுவார் பாகவதத்தைப் போல் இதில் கந்தப் பாகுபாடு இல்லை. முதலில் உள்ள கடவுள் வாழ்த்துப்

11 இக்காலத்தில் அம்மரபு பெரு வழக்காகி விட்டதைக் காண்கின்றோம்.

பகுதி ஆறு பாடல்கள் உடையது. இவற்றில் முறையே ஆலிலையில் பள்ளி கொண்ட குழவி, யாவும் தானாகி நின்ற தலைவன், பரமபதத்து ஒளி கொளரி, தசரதனடியில் வீழ்ந்த செம்மல், வாசுதேவன், மகிழ் திருப்பணி செய் ஆயனார் என்று வணக்கம் கூறப்பெறுகின்றது.

முதல் படலம் திருவரங்கப் படலம் என்பது; 155 பாடல்களையுடையது. முதல் வாழ்த்து காவிரிக்கு.

*சீராகும் இந்திரை மண்மகள்*
*சேர்ந்து போற்ற*
*ஓரா யிரவாய் பணிமீது*
*உறைவானை உன்கி*
*நீராயுழ னந்திரு பாலும்*
*நிறைந்து நேர்ந்த*
*காராளன் பொழில்சூழ் திருக்காவிரி*
*வாழி வாழி.*

என்பது. பிறகு அரங்கநகர் அப்பன் பாதாதி கேசமாகப் பல பாடல்களில் வாழ்த்தப் பெறுகின்றார். அரங்கநாதன் அடியிணை பீதாம்பரம், உந்தி மலர், உதரபந்தனம், கவுத்துவம், வாயும் முறுவலும், கண்டம், கண்ணிணை, திருமுகச்செவ்வி, நீலமேனி, மகுடம்[12], பஞ்சாயுதங்கள், பின் அரங்கநாயகி, பூதேவி, நீளை, கோதை, சூடிக்கொடுத்தவள், பிரணவ விமானம், அனந்தன், சேனாபதி, அநுமன் வாயில்காவலர், இவ்வாறு வருகின்றன. இதன் பிறகு தலங்களுக்கு வாழ்த்து கூறப் பெறுகின்றது. முதலில் அரங்கம் தொடங்கி பின் 83 பாடல்களில் 108 திருப்பதிகட்கும் வாழ்த்து சொல்லப் பெறுகின்றது. அடுத்த பாடலில் வருபவர்கள் இத்தலங்களில் எழுந்தருளியுள்ள மலர் மங்கை, நிலமங்கை, குழுத்தேவர் ஆகியோர். அடுத்த பாடலில் பிரகலாதன் முதல் வீடணன் வரையுள்ள பாகவதர்கள் ஆகியோர் வருகின்றனர். பின்னர் பன்னிரு ஆழ்வார்கள், இராமாநுசர், நாதமுனி, உய்யக்கொண்டார், மணக்கால்

12 அமலனாதிபிரான் (திருப்பாணாழ்வார்) நினைவுக்கு வருகின்றது.

நம்பி, ஆளவந்தார், பெரிய நம்பி, எம்பெருமானார், பெரிய நம்பி பிள்ளை, நம்பிள்ளை, மணவாள மாமுனி, சீரங்க நாராயண முனி, பராசர பட்டர், வேதவியாச பட்டர், கந்தாடையண்ணன், வாதிட்டையாயன் (2 பாடல்கள்). பின்னர் மீண்டும் கண்ணனைப் பல பாடல்களால் துதித்து, சுக முனிவரையும் வணங்கி, சாத்துவிக மகாபுராணமாகிய இதனைச் சொல்லத் தொடங்குகின்றார். இவ்வாறு 'பாயிரம்' என்று சொல்லத்தக்க திருவரங்கப் படலத்துள்ள 155 பாடல்களில் இவர் மிக விரிவாகத் துதி சொல்லியுள்ளார். தமிழில் இவ்வளவு அதிகமான கடவுள் வாழ்த்துப் பகுதி வேறு எந்த நூலிலும் இல்லை. கடவுள் வாழ்த்துப் பாடல்கள் யாவும் 'வாழி' என்ற முடிபையே கொண்டவை. மேலும் இங்கு, பெரும்பான்மைப் பகுதி பாடல்தோறும் யாப்பை மாற்றி இவர் பாடி வரும் முறை ஒரு விசித்திர அமைப்பாகும்.

இன்னொரு சிறப்பு. இந்த நூலில் ஒவ்வொரு படலத்தின் தொடக்கத்திலும் ஒரு திருமால் வணக்கப் பாடல் வருகின்றது. இவற்றையும் திருவரங்கப் படலப் பாடல்களையும் சேர்த்தால் இது 300 பாடல்கட்கு மேற்பட்ட ஒரு சிறந்த திருமால் தோத்திர நூலாக அமையும். பல சமயம் இரண்டு துதிப் பாடல்கள் தரப் பெறுகின்றன. முதல் பாடல் துதியில் 'தொண்டீர்' என்று மக்களை நோக்கிய 'விளி' அமைகின்றது. இரண்டாம் பாடல் வரும்போது 'என் மனனே, உலகேழயின்றவன் நாமம் பகர்தி' என்பது போன்ற தொடர்களால் நெஞ்சை விளித்துப் பேசுகின்றார். சிற்சில இடங்களில் அந்தந்தப் படலத்தில் கூறப்போகும் பொருளைச் சுருக்கி 'இவ்வாறெல்லாம் செய்த கண்ணனை வணங்குகிறேன்' என்கின்றார். பன்னிரு நாமங்களையும் சொல்லி வணங்கும் பாடல்கள் பல.[13] ஒரு பாடல்:

*கேசவன் நாராயணன் உயர்மாதவன்*
*கிளர்கோ விந்தன் விண்டு*
*மாசகன் மதுசூதன் திரிவிக்கிரமன்*
*மன்னி வாமன் அயிர்மலியும்*

13 நம்மாழ்வாரின் 'பன்னிரு திருநாமப் பாட்டு' (திருவாய் 2.7) நினைவிற்கு வருகின்றது.

*தேசுறு நிகரில் சீதரன்*

*இருடிகேசன் ஒண்பதும நாபன்சீர்*

*வீசிய தாமோதரன் என உரையின்*

*வினையற உயர்பதத் துறலாம்.*

என்பது.

ஒரு பாடலில் பன்னிரு மாதப் பெயர்களும் அமையப் பாடியுள்ளார்.

*வாமமவிர் சித்திரைவை காசியானி கலையாற்றி*

*வெண்ணைக்காடி யாவணிக்கு ணின்று கஞ்சத்*

*தீமையன் மண்விழப் புரட்டாசியற் பசிசு*

*பாலன் சிரந்துணியவே ஆழியைவிடு நற்றேவன்*

*சோமகுல அந்தகன்சேய் முனர்நடுங்காத திகைத்தாள்*

*தூசிடைமாளா தருளுந் துளபமார் கழியான்*

*பூமன்வனிதைக் காய்மாசில் சாபங்குனியப் போரினில்*

*தெசமுகனைச் செற்றானைப் போற்றி செய்வாம்.*

என்பதில் இதனைக் காணலாம். பல இடங்களில் தசாவதாரங்கள் குறித்துப் பாடப் பெற்றுள்ளது.

*ஊரிலி யுருவம் இலிகுண மிலிபே*

*ரிலியிழை கருமமொன் றிலியால்*

*ஆருனை யறிவார் அறிந்தவர் பிறவி*

*அளக்கரின் வீழ்ந்திடா வண்ணம்*

*சீருறு மீன்கூ ரும்கிரி மான்குறள்*

*மழுச்சி லையலா யுதராய்*

*நேரில்யா தவனா யிவணினிற் றோன்றி*

*நிகரிலாக் கற்கியு மாவாய்.*

என்பதில் தசாவதாரங்களும் நுவலப் பெற்றிருப்பதைக் கண்டு மகிழலாம்.

ஒரு துதிப்பாடலில் முத்தி நகர் ஏழும் குறிப்பிடப்பெற்றுள்ளன.

*மாசில் அயோத்தி மதுராபுரி மாயா*
*காசி உயர்காஞ்சி கவின்சேர் அவந்திகா*
*ஏசில்கடற் றுவரையோ டிவ்வெழு நகரின்*
*ஆக்கல் முத்தியருள் அச்சுதன்பதம் பணிவாம்.*

என்பதில் ஏழு நகரங்களும் குறிப்பிடப் பெற்றுள்ளதைக் காணலாம்.

ஒரு பாடலில் எண்கள் நிரல்பட அமைத்துப் பாடியுள்ளதைக் காணலாம்.

*ஒருதனி முதல்வன் இருசுட ராகி*
*உயர்ந்திரு மூர்த்திகள் மூன்றாய்*
*அருமறை நான்காய் ஐந்துபூ தமுமாய்*
*ஆறுசாத் திரங்களாய் ஏழு*
*பரவையாய் எட்டுப் பருப்பத மாகிப்*
*பவமிலா நவக்கிர கத்தின்*
*சுரூபமாய் நிலத்தில் தசவவ தாரம்*
*ஆகிய சோதியைப் பணிவாம்.*

என்ற பாடலில் ஒன்று முதல் பத்து எண்கள் நிரல்பட அமைந்திருப்பதைக் காணலாம்.

கம்ப ராமாயணத்தில் பாயிரத்தில் உள்ள 'நாடிய பொருள் கைகூடும்' என்ற பாடலைத் தழுவி இவர் தம் நூலுக்கும் இரு பாடல்கள் அமைத்துள்ளார். அவற்றுள்,

*நீதிசேர் செல்வம் வாய்க்கும்,*
*நிவந்த மெய்த்தருமம் நீளும்,*
*ஏதமின் ஞான மெய்தும்,*
*இந்திரை இனிது நோக்கும்,*
*சேதிப ராச னோடச்*
*செருவென்று விதற்ப னல்கும்*
*கோதையை மணந்த மாயோன்*
*சிலைவலி கூறு வோர்க்கே.*

என்பது ஒரு பாடல்.

நாச்சியார் அவதாரப் படலத்தில் நாச்சியார் திருவவதாரம் செய்து வளர்ந்து வருகின்ற நிலையைக் குறிப்பிடுமிடத்து பிள்ளைத் தமிழுக்குரிய பெரியாழ்வாரின் கருத்துகள் பலவற்றைப் பாடலில் அமைத்துப் பாடியுள்ளார். பின்வரும் பாடல் 'தாலப் பருவத்து'க்குரியது.

*தாலேலோ வினைதானி லாதவள்*

*தாலேலோ சுதைதங்கு பொற்குயில்*

*தாலேலோ கமலா சனத்தவள்*

*தாலேலோ திருவென்று சாற்றினார்.*

என்பது. தொடர்ந்து விளையாட்டு. 'செங்கீரையாடுக செம்மையுற', 'சப்பாணி கொட்டுக சந்தமுற', 'தவழ்ந்தே விளையாடுதி', 'தோள்வீசி நடந்திடு', 'தளரும் நடை நீ நட', 'அச்சோ புயலே', 'புறம்புல்குதி', 'அப்பூச்சி கண்டாடுக', 'அம்புலி வா என்று துதி', 'அக்காக்கை பொன்னால் அமர்கோல் கொடுவா', 'தும்பிமலர்ஒது' என்றெல்லாம் தாயார் போற்றுவதாகக் கூறி மகிழ்கிறார். விளையாட்டைச் சொல்லும்போது, 'சிறு போது சிறு சோறு அடுதல்', 'கழங்காடுதல்', 'அம்மனை பாடியாடுதல்', 'பந்தாடுதல்', 'ஊசலாடுதல்', 'நீராடல்', 'மலர் கொய்தல்' என்பவற்றைத் தனித்தனியாக விரித்துரைக்கின்றார்.

இயற்கையை இவர் வருணிக்கத் தலைப்படும்போது எங்கும் மர வகைகளை அடுக்கிச் செல்வார் (7: 32-35).

**பாகவதக்கதை:** இந்த (வடமொழி) பாகவதத்தின் போக்கும் தொடர்பும் விளங்குதற் பொருட்டு கதையின் சுருக்கம் ஈண்டு தரப் பெறுகின்றது.

ஆறாம் அத்தியாயத்தில் 'நாச்சியார் திருவவதாரப் படலம்' என்ற பெயரோடு கதை தொடங்குகின்றது. கண்ணனுடைய தேவியாகிய உருக்குமிணி விதர்ப்ப நாட்டு மன்னன் மகளாகப் பிறந்து, மணப்பருவம் அடைந்தபோது நாரத முனிவன் வருகின்றான் (6). 78 படலம் வரையில் அவளுக்கு நாரத முனிவன் கூறும் வரலாறு ஆகும். முனிவன் அவளுக்கு கசேந்திர மோட்சம், வராக அவதாரம், கபில முனி வரலாறு, நரசிங்க அவதாரம், துருவன், மச்சாவதாரம், கூர்மாவதாரம் (7-13) ஆகியவற்றை உரைக்கின்றான். அடுத்த அண்டப் படலம் (14) என்பதில் பூலோகம் முதலான உலகங்கள், தீவுகள்

முதலியவை மற்ற புராணங்களில் உள்ளனபோல் விரிவாக நுவலப் பெறுகின்றன. பின்னர் பிருது சக்கரவர்த்தி, இடபராசன், வாமன அவதாரம், அஜாமிளன், உருக்குமாங்கதன், அம்பரீடன், பரசுராம அவதாரம், இராகவன்அவதாரம் ஆகிய வரலாறுகள் இயம்பப் பெறுகின்றன (15-22).

அடுத்த 42 படலங்கள் (23-64) கண்ணன் பிறந்தது முதல் அவனுடைய படத்தை உருக்குமிணி காண்கின்ற வரையில் கண்ணனுடைய வரலாற்றை நாரத முனிவன் நவில்கின்றான். தேவகிப் படலம் (23) கம்சனின் தங்கையாகப் பிறந்த தேவகியின் மணமும் அவள் பெற்ற குழந்தைகளைக் கொன்ற செய்தியையும் கூறுகின்றது. தேவர்கள் திருமாலை வேண்ட அவர் பூவுலகில் தேவகி வயிற்றில் கருவாய் வந்து தங்குகின்றார். சிறையிலிருந்த வசுதேவர் ஆயர்பாடியில் நந்தகோபன் மனைவி யசோதையிடம் அக்குழந்தையைக் கொண்டு போய் விடுகின்றார். உரோகிணி பெற்ற பெண்ணைத் தேவகியின் பெண் என்று எண்ணிக் கம்சன் கொல்ல முயலும்போது, அக்குழந்தை மாயையாக மாறி, 'உன்னைக் கொல்லத் திருமால் குழந்தையாகப் பிறந்திருக்கிறான்' என்று கூறி மறைகின்றது. கம்சன் தன் மந்திரிகளோடு ஆலோசித்து அக்குழந்தையைக் கொல்ல வழி என்ன என்று தேடுகிறான் (24).

பூதனை வதை, சகடாசுரன், காரியாசுரன், குக்குடாசுரன் வதைகள் (25-28) நடைபெறுகின்றன. கண்ணன் வெண்ணெய் திருடுதல், அவன் வாயினுள் யசோதை உலகத்தைக் காணுதல் (29), ததிபாண்ட முத்தி (30), மருத மரமாக வந்த அசுரர், பகாசுரன், அகாசுரன் வதை (31-33), கண்ணன் தானே ஆயர் சிறுவராயும் கன்றுகளாயும் இருந்து மாயை காட்டுதல் (34), தேனுகன் வதை, காளியமர்த்தனம், பெலம்பன் வதை, கோபியர் ஆடை கவர்தல், வனத்திலிருந்த வேதியர் மனைவியருக்கு அருள் புரிதல், கோவர்த்தனக்கிரியைத் தூக்கல்[14], கல்மாரியிலிருந்து காத்தல், குழலூதுதல்[15] (35-42) அம்பிகாவனத்தில் நந்தனை நாகம் பற்றி விழுங்கக் கண்ணன் திருவடி பட்ட மாத்திரத்தில் நாகம்

14 பெரியாழ். திருமொழி 3.5 படித்து நுகரத்தக்கது.

15 மேலது 3.6 ஓதி உணர்ந்து மகிழத்தக்கது.

வித்தியாதரனாகி விமானத்தில் ஏறிச் செல்லுதல் (43), கும்பன் பெண் நப்பின்னையை ஏழு விடைகளை அடக்கி மணத்தல் (44), அருட்டாசுரன், கேசி வதை, வியோமனன் வதை (45-47), அக்ரூரன், சமந்தக மணியின் வரலாறு (48), தாருகன் வதை (49), சுதாமகாவுக்கு அருளுதல், திரீவக்கிரி என்ற கூனிக்கு அருளுதல் (51), இந்திர தனுவை யொத்த ஒரு வில்லை வளைத்து வளைத்து ஒடிக்க, சூழ்ந்த சேனையை அழித்தல் (52), கஞ்சன் செய்யும் கொலை முயற்சி - குவலயாபீடம், சாணூரன், கம்சன் வதை (54-56), உக்கிரசேனன் முடிசூடுதல், சாந்தீப முனிவர்க்கு இறந்து போன பிள்ளையை வருணனிடமிருந்து பெற்று குரு தட்சிணையாகக் கொடுத்தல் (57-58), கண்ணன் மதுரையில் இருக்கும்போது அங்கிருந்து உத்தவன் ஆயர்பாடி சென்று கண்ணன் பழகிய ஆயர் கன்றுகள் இடங்கள் பார்த்து வருதல் (59).

பாண்டவர்க்கு நேர்ந்த இன்னல்களை அக்ரூரன் சொல்லக் கேட்டு அறிதல் (60), கம்சன் வதம் கேட்டு அவன் மாமனாகிய சராசந்தன் படையோடு வந்து, கண்ணனிடம் போரிட்டுத் தோற்று ஓடுதல் (61), அசுரர் கோமான் சிரகாளன் என்பவன் முனிவருக்குத் தீமை செய்வது கேட்டு அவனோடு பொருது அவனை அழித்தல் (62), காள எமன் வதை (63), இரேவகன் என்னும் அரசன் மகள் இரேவதியை மணத்தல் (64), நாரத முனிவன் கண்ணன் குணாதிசயங்களை உருக்குமிணிக்கு எடுத்துக்கூற அவள் அவனை மணக்க உறுதி கொள்ளுதல், அவளுடைய விரகதாபம், ஒரு தோழி கண்ணன் உருவத்தை படத்தில் எழுதுதல் (65), விதர்ப்பராசன் மந்திரிகளோடு கலந்து மகளுக்கு ஏற்ற மணவாளன் கண்ணனே என முடிவு செய்தல், ஆனால் அவனுடைய மகனான உருக்குமிதன் சிசுபாலனுக்கு அவளைக் கொடுக்கத் துணிந்து மறுநாளே ஓலை போக்குதல், உருக்குமிணி ஒரு புரோகிதன் மூலம் கண்ணனுக்கு ஓலை அனுப்புதல், மறுநாள் சிசுபாலன் வரவும் உருக்குமிதன் தங்கைக்கு மணக்கோலம் செய்யுமாறு கட்டளையிடுதல், உருக்குமிணியும் அன்னையுமாக அம்பிகை ஆலயம் சென்று வழிபட்டு வரும் வழியில் கண்ணன் வர அன்னை உருக்குமிணியைக் கண்ணன் கையில் கொடுக்க, அவன் அவளைத் தேரில் ஏற்றிச் செல்லுதல்

(66-70), ஆகிய நிகழ்ச்சிகள் வரிசையாக நடைபெறுகின்றன. சூழ்ந்த சேனைகளை முறியடித்துச் செல்லும்போது உருக்குமிதனைப் பலராமன் மார்பில் அடித்துத் தலையை முறிக்கப் போகும்போது உருக்குமிணிக்காக அவனை விடச் செய்கின்றான். மீண்டும் உருக்குமிதன் சண்டைக்கு வர அவனைப் பங்கப்படுத்தி வெற்றியோடு துவாரகை அடைகின்றான் (71-78). உருக்குமிணிப் பிராட்டி திருமணம் (79) சிறப்பாக நடைபெறுகின்றது.

சத்திராசித்து மன்னன் என்பவன் சிறப்பான சமந்தக மணி வைத்திருக்கிறான். அதைக் கண்ணன் கேட்டபோது அவன் கொடுக்கவில்லை. அவன் தம்பி அம்மணியை அணிந்து வேட்டையாடும்போது ஒரு சிங்கம் அவனைக் கொன்று மணியோடு செல்ல, கரடியரசன் சாம்பவான் அச்சிங்கத்தைக் கொன்று அம்மணியைத் தன் மகள் சாம்பவதிக்குக் கொடுத்தான். கண்ணன் சாம்பவதியை மணந்து அம்மணியைப் பெற்றபின் சத்திரசித்து உண்மையறிந்து தன் மகள் சத்தியபாமையைக் கண்ணனுக்கு மணம் செய்து கொடுத்தான் (80-81). சத்தியபாமையின் தந்தை சத்திராசித்துவைக் கொன்ற சதத்தனுவாவை வதைத்தான் (82). தன்னை விரும்பித் தவம் செய்த காளிந்தியை மணந்தான் (83). மித்திர விந்தை சுயம்வரத்திற்குச் சென்று அவளை மணந்தான் (84). ஏழு விடைகளை அழித்து நாக்கின சித்துவை மணந்தான் (85). பத்திரை என்ற பெண்ணை மணந்தான் (86). வில் வளைத்து மச்சம் வீழ்த்தி இலக்கணையை மணந்தான் (87). நரகாசுரன் வதை (88), பாரிஜாதத்தைப் பெற்று சத்தியபாமைக்குக் கொடுத்தல் (89). சுபத்திரையை அர்ச்சுனனுக்கு மணம் செய்வித்தல் (90), வசுதேவர் வேள்வி செய்தல் (91). கண்டகர்ணன் முக்தி (92). கயிலாய யாத்திரை; பௌண்டனன் வதை, சுதரிக்கனன் வதை, துவிந்தன் வதை (93-96).

மன்மதன் பிறப்பு, சம்புராசன் வதை, அநிருத்தன் பிறப்பு, கண்ணன் ஏக காலத்தில் பதினாறு ஆயிரம் கோபியருடனும் கூடி வாழ்ந்திருத்தலை நாரதன் காணுதல் (97-99) அங்கிசமன், திபிகன் வதை (100), ஒந்தியாய் இருந்த நிருகராஜன் (101). உருக்குமிணி திருமணம் (102) பரசுராமன் அத்தினாபுரத்தைப் பெயர்த்து எறிவதற்கு அஞ்சி துரியோதனன் தன் மகள் இலக்கணையைக் கண்ணன் மகன்

சாம்பனுக்கு மணம் செய்து கொடுத்தல் (103), லவனாசுரனுடன் பொருது அவன் மகள் உடாங்கனையைத் தன் மகன் சாம்பனுக்கு மணம் செய்வித்தல் (104).

தரும புத்திரனுடைய இராச சூய யாகத்தில் தன்னை எதிர்த்த சராசந்தனை வதைத்தல் (105). சிசுபாலன், சாலுவன், தந்தவக்கிரன் வதை (106-108), பாண்டவர் வனவாசம் (109). தரும புத்திரனுக்கு வியாசர் குருகுல வரலாறு கூறுதல் (110). தட்ச யாக அழிவை வியாசர் கூறுதல் (111). பார்த்தன் சிவனை நோக்கித்தவம் செய்து பாசுபதாத்திரம் பெறுதல், ஊர்வசியின் சாபம் பெறுதல் (112). வீமன் மந்தார மலர் பெற்று வருதல் (113). சிறைபட்ட துரியோதனனை விடுவித்தல், சயித்திர பங்கம், நச்சுப் பொய்கை வரலாறு (114), விராடநகர் வாசம், கீசகன் வதம் (115). கிருட்டிணன் தூது (116). மகாபாரதப் போர் (117). பலராமன் தீர்த்த யாத்திரை (118). துரியோதனன் வதை (119). உத்தரை வயிற்றில் பரீட்சித்து பிறத்தல் (120). மிதிலை மன்னனுக்கு அருள் செய்தல் (121). குசேலர் அருள் பெற்றது (122), அந்தணன் புதல்வனை மீட்டது, தசாவதார நடிப்பு (123). யாதவர் சாபம் பெறுதல், உத்தவன் வினவும் வினாக்களுக்குக் கண்ணன் உபதேசம் கூறி அனுப்புதல், இதுவே உபதேசப் படலம் (124). துவாரகையில் இருந்தோர் முக்தி அடைதல் (125). மார்க்கண்டேயர் வரலாறு, விருகாசுரன் (127-128). பரீட்சித்து மோட்சம் அடைதல், சனமேசயன் தந்தைக்குக் கடன்கள் ஆற்றி பாகவதம் கேட்டு முக்தி அடைதல் (129-130). கல்கி வரலாறு, கலியுக தர்மம் (131). வைனதேயனுக்குப் புராணங்களின் சாரமான திருமால் பதிகளையும் மூர்த்திகளையும் தீர்த்தங்களையும் வியாசர் உரைத்துப் புராணத்தை நிறைவு செய்தல் (132).

இவண் குறிப்பிட்டதே பாகவதக் கதை. அளவால் கந்த புராணம், கம்ப ராமாயணம் ஒத்த பெருமை இந்நூலுக்கு உண்டு என்பது தெளிவு. இவ்வளவு பெரிய நூலுள்ள பொருள்களைத் தேர்ந்தெடுத்து சில மட்டும் இங்கு சொல்ல முற்படுகிறோம். எல்லாவற்றையும் சிறு அளவில் சொல்லிவிட முடியாது.

**புராண பாகவதம் - நூற்பொருள்:** நூலில் 'அண்டப் படலம்' என்பது பூவுலகம், தீவுகள் முதலிய பிரபஞ்சப் பகுதிகள் எல்லாவற்றின்

தோற்றமும் கூறுகிறது. இது 16-ஆம் நூற்றாண்டில் தோன்றிய சிறப்புடைய எல்லாப் புராணங்கட்கும் பொருந்தும் ஒரு பொது இயல்பு. பெரிய அளவிலான சிவபுராணங்கள் அனைத்திலும் இவ்வியல்பைக் காணலாம். அப்படியே 'கலியுக தர்மம்' என்று எல்லாப் புராணங்களுக்கும் ஒரு படலம் சொல்லும். அதை இவர் காஞ்சிப் படலத்தில் சில பாடல்களால் சொல்லுகிறார். திருமால் வரலாற்றில் போர்ச் செய்திகள் மிகவும் அதிகம். அவற்றையெல்லாம் இவர் வருணிக்கும்போது பெருங்காப்பிய இலக்கணம் பொருந்த விரித்துச் சொல்வது ஆங்காங்கு சிறப்பாகவே உள்ளது. அப்படியே ஓரிடத்தில் இவர் வேட்டையை வருணிப்பதும், போர்த்தன்மை பொருந்தவே அமைந்துள்ளது.

'கயிலாச யாத்திரை' என்ற படலத்தில் திருமாலின் துவாதச நாமங்களும் விரிவாகச் சொல்லப்படுகின்றன. குருகுல மரபே பாரதச் சரித்திரம். இம்மரபு, இந்நூலில் மிகவும் விரித்துப் பாடப் பெற்றுள்ளது (539 பாடல்கள்). சந்தப் பாடல்கள் சொல்லப் பெற்ற இடமெல்லாம் இந்நூலாசிரியருக்கு எளிதாக வந்து ஏவல் கேட்கின்றன. 'நம' என்று பாடித் துதிப்பதில் இவருக்குப் பெருவிருப்பம். முடிந்த இடமெல்லாம் இது சொல்லப் பெறும். திருமாலைச் சென்று துயிலெழுப்பிய பிறகு தேவர்கள் துதிக்கின்றனர். 12 பாடல்கள் திருமாலின் பன்னிரு பெயர்களையும்[16] சொல்லித் துதிப்பன.

*ஈச நேமிய எம்பர னே, அலை*
*வீசு பாற்கடல் மேவிய வித்தக*
*மாசி லாமலர் மங்கைதன் நாயக*
*கேச வாகெரு டக்கொடி யாய்நம.*

கண்ணன் மண் தின்றான் என்று கோபித்து யசோதை வாயைத் திறக்குமாறு சொல்ல, அவன் வாயைத் திறந்தபோது அவ்வாயினுள்ளே யசோதை காண்கின்றாள்:

*பிரமனைக் கண்டாள் அண்ட*
*கோளத்தின் பெருமை கண்டாள்*

16 நம்மாழ்வார் திருவாய் மொழி 2.7 ஒப்பிடலாம். (பன்னிரு திருநாமப் பாட்டு)

*இரவியைக் கண்டாள், வானின்*
*இந்துவைக் கண்டாள், எட்டு*
*வரையினைக் கண்டாள், ஏழு*
*மகோததி தன்னைக் கண்டாள்*
*கரியிரு நான்கும் கண்டாள்,*
*கனகமாங் கிரியைக் கண்டாள்*

*ஏருறத் திசையின் வைகும்*
*எண்மரைக் கண்டாள், வானில்*
*தாரகைக் கண்டாள், தேவ*
*தவத்தினர் குழாத்தினைக் கண்டாள்*
*பாரினைக் கண்டாள், ஆயர்*
*பாடியில் தன்னைக் கண்டாள்*
*சீருறு மகனைக் கண்டாள்,*
*சிறந்ததன் கைக்கோல் கண்டாள்*

*ஏதிவன் இயற்கை என்னா*
*ஏங்கினள் இருகண் மூடி*
*ஆதியாய் அகண்ட மெல்லாம்*
*தன்வயிற் றடக்கி நின்ற*
*சோதியாம் இவனை என்னே*
*என்மகன் என்று சொல்லும்*
*பேதமை என்ன வென்று*
*பீதிகொண் டசோதை நின்றாள்*

அனைத்தும் அற்புதமான காட்சிகள்.

பாரதப் போர் பகருமிடத்து தொடக்கத்திலுள்ள கீதை உபதேசத்தை இங்கும் இயம்புகின்றார். 'பாரதப் படலம்' என்ற பகுதி போரைச் சொல்வது. இதனுள் 12 பாடல்கள் கீதை உபதேசம்; கருத்து, கண்ணன் 'யாவும் நானே' என்று நவில்வது.

*'விசயநீ யானே உன்றன்*
*வில்லியான் விசிகம் யானே*
*கசியுறு சதமும் யானே*
*துணியுமொன் னலரென் சேட்டை*
*வசையுனக் கெங்ஙன் எய்தும்*
*வருந்தல் நீ' என்று மாயன்*
*இசையுற விளம்பத் தன்பேர்*
*உருவம்வான் இலங்க நின்றான்*

என்பது அவற்றுள் ஒரு பாடல்.

நாராயண கவசம் என்று இவர் குறிப்பிடுகின்றார் (110:166). ஆனால் கவசத்தைச் சொல்லவில்லை. கவசம் செவ்வைச் சூடுவார் பாகவதத்தில் உள்ளது.

சிசுபாலன் கண்ணனைப் பழித்தபோது, வீடுமன் அவனைத் தடுத்துக் கண்ணனைப் புகழ்கின்றான் (13 பாடல்கள் 106: 49-62).

இவனே உலகேழையும் ஈன்ற ருள்வோன்,
இவனே அயனைத் தரும்ஈ றில்பிரான்,
இவனே அரன்வெவ் விடரைக் களைவோன்
இவனே உயரும் பதம்ஈ பவனே.'

என்பது காண்க. கண்ணன் அருள் பெற்றோருள் இருவர் குறிப்பிடத்தக்கவர் - ஒருவன் மலர் கொண்டு அணிந்தவன், ஒருவன் சாந்தம் கொண்டு அணிந்தவன் (படலம் 50, 51).

இவர்தம் பாடல்கள் எளிமையாய் இருப்பினும் கவிதைப்பண்பில் சிறந்தவையல்ல; சுவையற்றிருப்பதும் உண்டு. பின்வரும் பாடல்கள் காண்க. திருக்கல்யாணத்துக்காக உருக்குமிணியை அலங்கரிக்கும் சமயம் சேடியர்கள் வாக்காக வருவன:

*நித்திலம் பெண்நிறை மலர்க் காந்தளாம்*
*கைத்தலப் பெண் அருந்ததிக் கற்புப்பெண்*
*வித்தகப் பெண் விதர்ப்பனருட் பெண்நல்*
*உத்தமப் பெண் உருக்குமிணிப் பெண்ணே*

*மாதவப் பெண் மதிமுகம் பெண்மலர்*
*மீதி னுற்றபெண் வித்துருமப்*
*ஏதமற்ற பெண்ணிந் திரையாகும் பெண்*
*ஓதிமப் பெண்ணு ருக்குமிணிப் பெண்ணே*

இவற்றில் யாப்பும் சரியாக அமையவில்லை.

கண்ணனுக்குத் தேவியர் எண்மர்; பதினாயிரத்தொரு நூற்றெண்மர் என்று புராணம் சொல்லும். இத்தனை பேரிடமும் அவன் எவ்வாறு நேயமோடிருக்கிறான் என்பதைக் கண்டறிய ஒருநாள் நாரத முனிவன்[17] வந்தான். அவன் கண்டபோது, கண்ணன் ஒவ்வொரு தேவியர் இல்லிலும் எவ்வெவ்வாறு இருந்தான், எப்படி நாரதரைத் தவறாது உபசரித்தான் என்பதைப் புராணம் மிகவும் சுவைபடக் கூறும் (99:34-57)

'உபதேசப் படலம்' (படலம்-124) என்பது இப்புராணத்தில் ஒரு சிறப்பான பகுதி. இதனுள்ளும் உத்தவன் கேட்க கண்ணன் உத்தரம் கூறியனவாக 14 பாடல்கள் உள்ளன. அவை மிகவும் சிறப்பானவை; அவை கீழே தரப்பெற்றுள்ளன.

*ஏதமில் இயமம் எத்தனை, நியமம்*
*எத்தனை, சற்குணம் ஏது,*
*நீதியாய் வழங்கும் தவம்ஏது, சவுசம்*
*ஏது, நிகரில்பொறை ஏது,*
*பாதகம் அகலும் தவம்எது, தியாகம்*
*எதுதனம் எதுபலம் ஏது,*
*வேதமார் வேள்வி ஏது, மறைநெறியார்*
*விழுமிய தக்கணை ஏழு. (1)*

17 தசரதனுக்கு அறுபதினாயிரம் மனைவியர் என்பதையே தந்தை பெரியார் ஒரு நகராண்மைக் கழகத்திற்குரிய கூட்டம் என்று கிண்டல் செய்வார். இது தெரிந்திருந்தால் இதனை கிண்டல் செய்திருப்பார். மக்கள் இராமாயணத்தை உண்மைக் கதை என்று நம்புவதால் இவ்வாறு கிண்டல் செய்தார். கட்டுக்கதை என்று கொண்டு இதனைத் தள்ளிவிடுதல் அறிவுடைமையாகும்.

தயிரியம் எது,நற் சவுரியம் ஏது,
சத்தியம் எது, உண்மை ஏதாம்,
இயல்புறும் இலாபம் எது, வித்தை ஏது,
நலனுறு விபவங்கள் ஏது,
மயர்வற வயங்குந் திருஏது, வண்மை
விளர்வி தானங்கள் ஏது,
துயர்உறும் இலச்சை ஏது, சுகம் ஏது
துரிதமாய் வருதுக்கம் ஏது (2)

உறவெது, சுவர்க்கம் எரிநர கெய்தாது
உயர்த்திடு மனைஎது, நெறிசேர்
அறிவெது, அழிவில் லாதன எது,நல்
அறிவிலா னெவனெவன் மூர்க்கன்,
வறியவ னெவன்,சம் பன்னனர், வயங்கும்
பண்டித னெவன்,மரு ளகற்றி
அறிவுறும் ஈசன் எவன்,எவன் ஈசன்
இயம்பென அரியருள் செய்வான் (3)

சத்தியம்பரர் சொத்து றத்தலின் னாவைத்
தவிருதல், பிறர்மனை அடையாச்
சுத்தமெய் மறையை யறிகுதல் நிலைமை
துலங்கிடும் பொறுமை துன்பங்கள்
எத்தனை வரினும் வெருவுதல் ஒழிதல்
சஞ்சலம் விடைய மற்றிருத்தல்
குத்திர விடமம் விலக்குதல் அவச்சொல்
குறைப்ப தீதுஇமயம் பன்னிரண்டே (4)

தவம்செவம் ஓமம் சவுசநற் சிரத்தை
தானம் ஆசாரிய சேவை

பவந்தனை ஒருவுந் தீர்த்தயாத் திரைஒண்
பரமனாம் முராரிதன் பத்தி
அவந்தனை அகற்றும் பரவுப காரம்
அறிஞரா யுளம்மகிழ்ந் திருத்தல்
கவந்தனைக் களைந்தோன் அருச்சனை யிவைதான்
துவதசங் கலக்கமில் நியமம் (5)

பரமனாம் எனது பதந்தனில் கருத்தைப்
பற்றுவித்து அமர்தல்சற் குணமாம்,
சரீரவிந் திரிய மொடுக்குதல் தவமாம்
சவுசமே கருமத்தை யொழித்தல்,
இருநிலத் திடுக்கண் கழிப்பது பொறையாம்,
இருள்தரு காமத்தை ஒழித்தல்
அரியமா தவமாம், தியாகம்இல் வாழ்க்கை
அகற்றுசந் நியாசமே ஆகும் (6)

தருமமே தனமாம், தயங்கிய பிராணா
யாமமே சரியிலாப் பரமாம்,
விரிவுறு மவிதோய் வேள்வி யேயான்
ஆகிய வரிவிளம்பு தக்கணைதான்
மருளகல் குருவாய் மலருஞா னோப
தேசமாம், வருதயி ரியமாம்
விரகமோ டிரத மொருவதல், கலரை
வெறுத்தலே சவுரியம் ஆகும் (7)

ஆற்றுஞ் சமமே அவமில்சத் தியமாம்
அரையுநல் வசனமே உண்மை,
தோற்றும்ஈ றிலாமு ராரியாம் எனையே
துதித்திடும் பத்தியாம், வித்தை

சாற்றிடில் பரமாத்து மாவினை அறிதல்
சரியிலா விபவமா வனதான்
ஏற்றமா கியவை குந்தத்தினில் அங்கும்
ஈசுரன் இணையடி சேர்தல் (8)

ஆசையற் றிடுதல் திருவென லாகும்,
அளித்திடு தானமே தென்னில்
ஏசுற நிலத்தில் பலபிரா ணியையும்
தெண்டியா தொழிதலாம், இலச்சை
மாசுறு கருமம் தனின்மன மொழிதல்,
மறுவிலாச் சுகமின்ப துன்பம்
பாசம்அற் றிடவே கடக்குகை, துக்கம்
பலமுறு காமநத் திடுதல் (9)

உறவுசற் குருவாம் சுவர்க்கமாம் அவன்தாள்
உயர்ந்தசாத் திககுண மலிதல்
மறலிதன் உலகின் நிரைய மாவது
தாமத குணம் வளர்தல், ஒண்மனையே
அறிவுறு கருத்தார் சரீரநல் லாள்இலா
அச்சுத னாமெனை அடைதல்,
வெறியுறு நெறியா வதுமனம் எங்கும்
விரிந்துகுத் திரதெய்வத் தமர்தல் (10)

அருளிலா தவன்இந் திரியநிக் கிரகம்
செயுநல னறிவி லாதவனாம்
மருடரு மதிக மூர்க்கனாங் காரம்வளரநான்
சமர்த்த னென்று அமர்வோன்
திருவரும் வறியன் சேர்ந்திடும் பொருளில்
சிந்தையில் பிரீதியில் லவனே

இருநீதி யுறுசம் பன்னனாம் அவனே
இயல்புறு சற்குண முடையோன் (11)

சரியில்பண் டிதன்இல் வாழ்க்கையில் பாசந்
தவிர்த்துநற் கதியினை அறிவோன்
இருநில மதனின் ஈசனா னவனே
விடையறப் பற்றுதல் தவிர்ந்தோன்
மருடரு நீசன் சகலபா வத்தின்
மருவுவோன் இவையெலா ஞான
உருவமா யமரும் தவவுணர் கெனவே
உலகளந்த வன்பினா அறைவன் (12)

இருநிலம் அதனில் இயற்றும்இல் வாழ்க்கை
உத்தியைக் கடந்திட விலங்கி
வருதருநா வாயா மனிதர்தஞ் சனன
மன்னியவ் ஓடத்தை விடுப்பான்
சரியில்சற் குருவாம் சார்ந்திடா நெறியைத்
தருமனு கூலமாம் பவனன்
பரமனா கியயா னிவையறிந் துய்யாப்
பாவியர் தம்மைத்தாங் கொடுப்பார் (13)

துட்டமா வினின்வாய் துலங்கய முறவே
பிணித்திடும் சூத்திரக் கயிறு
மட்டினை அறியா ததிகமாய் மெட்டி
அவமென மனத்திடை உணர்ந்தே
விட்டுமெட் டிடுநல் விரகினைச் சீவன்
விடையத்தின் கருத்தினை விட்டே
அட்டைபோல் அவைபற் றுவமுனர்த் திருப்பி
என்னிடத்து அமைப்பதே அறிவாம் (14)

என்பவையாம்.

**நப்பின்னை வரலாறு:** ஆசிரியர் 36 பாடல்களில் 'நப்பின்னைப் படலம்' என ஒரு படலம் அமைத்துள்ளார். நப்பின்னை வரலாறு தமிழ் மொழிக்கு ஒரு சிறப்பான வரலாறு. யசோதையின் தமையனாய் மிதிலையில் வாழ்ந்த கும்பகனுடைய பசுநிரையில் 'காலநேமி' என்ற அசுரனின் புத்திரர் எழுவர் எருதின் உருவம் கொண்டு புகுந்து யாருக்கும் அடங்காது பேரின்னல் விளைத்து வந்தனர். அவற்றை அடக்குவார் யாரும் இலர். மிதிலை அரசனான வெகுலாசுவன் என்பவன் தன் சேனைகளைக் கொண்டு அடக்க முயன்றும் முடியவில்லை. "இந்த எருதுகளை அழிப்பவர்கட்கு என் மகள் நப்பின்னையை மணம் செய்து கொடுக்கிறேன்" என்று அவன் பறைசாற்ற, வந்தோரெல்லாம் அந்த எருதுகளால் தாக்குண்டு மடிந்தனர். அதன்மேல் கும்பகன் நந்தகோபனுக்குச் சொல்லியனுப்ப, அவன் அங்கு வருகின்றான். உடன் வந்த அவன் மகனாகிய கண்ணபிரான் அந்த எருதுகளோடு போரிட்டு அவற்றை அழித்தனன். நப்பின்னை கண்ணனுக்கு மாலை இட்டாள். முறைப்படி திருமணம் நடைபெற்றது.

நப்பின்னை திருமணம் உருக்குமிணிப் பிராட்டியின் திருமணத்திற்கு முன் நிகழ்ந்தது. நப்பின்னையின் வரலாறு தமிழ் நாட்டில் வழங்கும். சிலப்பதிகாரம், மணிமேகலை, சிந்தாமணி ஆகிய காப்பியங்களும், தேவாரம், திருக்கோவையார் ஆகிய சைவ நூல்களும், ஆழ்வார் பாசுரங்களும் நப்பின்னையை கண்ணன் தேவியாகக் கூறுகின்றன. ஆண்டாள் திருப்பாவை 20-ஆம் பாசுரம் திருமாலைத் துயிலெழுப்புமிடத்து, "செப்பன்ன மென்முலை செவ்வாய்ச் சிறுமருங்குல் நப்பின்னை நங்காய் திருவே துயிலெழாய்" என்று கூறியிருத்தலைக் காணலாம். திருவள்ளுவ மாலை, "உபகேசி தோள் மணந்தான்"[18] என்று கூறும். நேமிநாதர் விருத்தி கூறும் பண்டைய தமிழ் இலக்கணத்தில் "ஏறு தழுவுதல்" என்ற ஒரு செயல் ஆயர்களிடையே திருமணத்துக்கு முன் நிகழ்வதாகச் சொல்லப் பெற்றுள்ளது. இதுவே பாகவத புராணத்தில் "நப்பின்னைப் படலமாக" உருக்கொண்டது போலும் எனக் கருதலாம். நப்பின்னையின் பெயர் பின்னை; 'ந' என்பது அடைமொழி; 'பின்னை', 'பிஞ்ஞை' என்னும் இலக்கியத்தில் வழங்கும்.

18 திருவள்ளுவ மாலை - 21 நல்கூர் வேள்வியார் பாடல்

தமிழ்நாட்டில் ஆண்டாள் நீளையின் அவதாரம் என்று சொல்வர்.[19] இந்த நீளையே நப்பின்னை என்பது பிள்ளை லோகஞ்சீயர் முதலான ஆன்றோர் கருத்து[20]. வடநாட்டுக் கிருஷ்ண லீலைகளில் கிருஷ்ணனுக்கு இராதை எப்படி ஒப்பானவளோ, அப்படியே தமிழ்நாட்டில் நப்பின்னை ஒப்பானவள்.

நப்பின்னை அல்லாமல் அருளாளதாசர், 'நாக்கினசித்து திருக்கல்யாணம்' என்ற ஒரு படலம் அமைத்துள்ளார். இங்கு இவ்வரலாறு 32 பாடல்களால் பகரப் பெறுகின்றது. கௌசலராசன் மகள், 'நாக்கினசித்து', தன்னிடமுள்ள ஏழு எருதுகளையும் அடக்கியவனுக்குத் தன் பெண்ணை மணம் செய்து கொடுப்பதாக முரசறைவித்தான். பிற அரசர்கள் எருதுகளை அடக்க முடியாது போக கண்ணன் அவற்றை அடக்கி காய்சினசித்தை மணந்தான். வந்து தடுத்த மன்னர்களை அர்ச்சுனன் தன் அம்பு மழையால் தடுக்க, கண்ணன் காய்சினசித்தைத் துவாரகைக்குக் கொண்டு சென்றான்.

இது புராண வரலாறு. இங்கு நாக்கினசித்து அரச பரம்பரை. நப்பின்னை ஆயர்குலத்தவள். ஆனால் எருதுகளை அடக்கி மணந்த இரு வரலாறுகளையும் இரு மணங்களையும் புலவர் கூறுவது ஒரு விசித்திரமே. நப்பின்னையின் வரலாறு வடமொழியில் இல்லை. கண்ணன் மணந்த தேவியருள் தலைசிறந்தவர் எண்மர்[21]. அவர்களாவர்:

---

19 துளசிச் செடியின் அடியில் பூமியில் கிடந்தமையால் பூமிப் பிராட்டியாரின் அம்சமாகவும் கூறுவதுண்டு. சீதாப்பிராட்டியால் உழுகின்ற கொழு முனையில் அகப்பட்டமையால் பூமிப் பிராட்டியாரின் அமிசமாகக் கூறுவர்.

20 மு. இராகவையங்கார் ஆராய்ச்சித் தொகுதி (1938). நப்பின்னைப் பிராட்டியார் என்ற கட்டுரை காண்க.

21 கண்ணன் தேவியர் எண்மரை மணந்தான் என்ற வரலாற்றைத் தழுவி சிந்தாமணியில் சீவகனுக்கு ஆசிரியர் திருத்தக்கதேவர் எட்டுமணம் சொல்லுகிறார். ஏறு அடக்கி நப்பின்னையை மணந்ததற்கு ஏற்ப, சீவகன் ஏறு அடக்கிப் பதுமுகனுக்கு ஆயர் குலப் பெண்ணான கோவிந்தையை மணஞ் செய்விக்கின்றான். அங்கும் கோவிந்தை மணம் சீவகனுடைய எட்டு மணங்களுக்குப் புறம்பாகத் தொடக்கத்தில் உள்ளது. கடைசி மணம் பாகவதத்தில் இலக்கணை மணம்; சிந்தாமணியிலும் கடைசி மணம் இலக்கணை மணம்.

| | |
|---|---|
| உருக்குமிணிப் பிராட்டி | மித்திர விந்தை |
| சத்தியபாமை | சத்தியை |
| சாம்பவதி | பத்திரை |
| காளிந்தி | இலக்கணை |

என்று வடமொழிப் புராணங்கள் கூறும். இவ்வெண்மருள் முதல் இருவரையுமே அடியவர் உலகம் நன்கு அறியும். இங்கு நீளையோ இராதையோ சொல்லப் பெறவில்லை. நப்பின்னை பற்றிய தமிழ் வரலாறுகள் வடமொழித் தொடர்பில்லாமலேயே வழங்குபவை. வடமொழியையொட்டி எட்டு மணங்களையும் பற்றிக் குறிப்பிட்ட அருளாளதாசர், தமிழ் மரபையொட்டி நப்பின்னை மணத்தை அதிகமாகச் சொன்னார் போலும். எப்படியும் ஏறு தழுவிய இரு வரலாறுகள் இங்கு உள்ளமை அறியத்தக்கது. அன்றியும் உருக்குமிணி திருமணத்திற்கு முன் நப்பின்னை, இரேவதி என்ற இருவர் மணங்களை இப்பாகவதம் கூறுவது கருதத் தக்கது.[22]

சத்தியை-சத்தியவதி, நாக்கினசித்து-நக்னஜித் என்று வடமொழியில் கூறப்பெறும்.

**பிற செய்திகள்:** 'அச்சுதானந்த கோவிந்தன்' என்பது இவருக்குப் பிடித்தமான ஒரு தொடர். உருக்குமிணியை நாச்சியார் என்றே சொல்லுவார்; இரு படலங்களை இப்பெயரையொத்து அமைத்துள்ளார். உருப்பிணி என்றும் சொல்வார்; இச்சொல் வடிவம் நாலாயிரப் பிரபந்தத்துள்ளும் காணப்படுவது. வடமொழிப் பெயர்களைத் தமிழில் வழங்கும்போது சில ஆசிரியர்கள் தம் மனம் போல் மாற்றிக் கொள்வர். 'சிஷ்யன்' என்ற சொல் 'சீடன்' எனவே வழங்கும்; மணவாள மாமுனி 'சிச்சன்' என்பார். வாணாசுரன் மகள் 'உழை' என்று சிலப்பதிகாரம் கூறும். அருளாளதாசர் 'உடாங்கனை' என்றே வழங்குகின்றார். இவர் சிலப்பதிகாரம் பயின்றதில்லை போலும். 'மிதிலை' என்பதை 'மிதுலை' என்று குறிப்பிடுகின்றார். காவிய நாயகிக்குரிய சிறப்புகள் அனைத்தையும் உருக்குமிணிப் பிராட்டியாருக்கு அமைத்துப் பாடுகின்றார். உருக்குமிணி அவதாரம்

22 ஆயர் குலத்து மணங்கள் யாவும் '**ஏறு தழுவுதல்**' என்ற முறையில் வருவதும் சிந்திக்கத்தக்கது.

கூறுமிடத்து, பெரியாழ்வார் திருமொழிப் பாசுரங்களையொட்டிக் கருத்துகள் அமைத்திருப்பதைக் காண முடிகின்றது. பொற்கொடிக்குச் சாதகம் பண்ணினார், தாயர் வாய்ச்சங்கம், பைந்தமிழ் காட்டினர், காமம் உருக்குமிணி என விளம்பினர், சோபனம் பாடித் தொட்டிலுய்த்தனர், பொன்னின் சங்கிலித் தொட்டிலாட்டித் தொனியெழப் பாடுவார், தாலேலோ என்று சாற்றினார், திருவிளையாடீரெனவே விளம்புவார், திருவே செங்கீரையாடுக, சப்பாணிகை கொட்டுக, தவழ்ந்தே விளையாடுதி, தோள்வீசி நடந்திடு, தளருந் நடை நீ நட, புறம்புல்குதி, அக்காக்கை பொனாலமர் கோல் கொடுவா, தும்பி மலரூது, பின்னர் கழங்குமாடிக் களித்து வந்தாள், அம்மானையுமாடினள், பந்தாடியு வந்தனள், ஊசல்லினி நாடினள், நீராடல் உவந்தனள் - என்ற சொல் வழக்குகளில் பெரியாழ்வார் பாணியில் பிள்ளைத்தமிழ் பொருளமைப்பினைக் காண முடிகின்றது.

பேதை, பெதும்பை நிலைகளை மேற்காட்டியவாறு அமைத்தபின்னர் மங்கைப் பருவ அழகை விரிக்கின்றார். பாதாதிகேசமாக 25 பாடல்களைக் காண்கின்றோம். சில சமயம் முழுப் பிரபந்தங்களையே இவர் நூலுள் அமைத்துள்ளதையும் காண முடிகின்றது. அவ்வாறு அமைத்தவை ஊசல், பள்ளியெழுச்சி என்பனவாகும். ஊசலில் பெரிதும் விருப்பமுடையவர் போலும்[23] சந்தர்ப்பம் நேர்ந்தபொழுதெல்லாம் ஊசல் வழக்கு தலைகாட்டுகின்றது. உருக்குமிணி திருமணத்தில் 'பொன்னூசலினேறினள் பூந்திரு' என்று பன்முறை குறிப்பிட்டபிறகு நான்கு பாடல்கள் 'ஆடீரூசல்' என்று அமைத்து மகிழ்கின்றார்.

*கைவளைகள் கலகலென ஆடீரூசல்*
*காலிலணி சிலம்பார்ப்ப ஆடீரூசல்*
*மொய்யணிஐம் பாலிலெழ ஆடீரூசல்*
*மூவுலகில் நிகரில்மின்னே ஆடீரூசல்*
*மெய்யுரைசெய் நாவுடையீர் ஆடீரூசல்*
*விதர்ப்பனருள் மெல்லியலீர் ஆடீரூசல்*

23 பிள்ளைப்பெருமாள் அய்யங்காரின் 'ஊசல் இலக்கியம்' நினைவிற்கு வருகின்றது.

*பையரவில் நடித்திடுவான் தேவி யான*

*பங்கயமேற் பசுங்கிளியே ஆடீரூசல்*

என இவற்றில் ஒரு பாடல். திருமணம் முடிந்தபிறகு கண்ணனும் உருக்குமிணியும் ஊசலில் அமர்கிறார்கள். அந்த இடத்தில் கவிஞர் எட்டுப் பாடல்கள் கொண்ட ஓர் ஊசல் பிரபந்தமே பாடிவிடுகின்றார்.

*நீலமணி யொடுமாலின் மணியு மாட*

*நித்திலத்தா மமுமாட நிறைந்த பூவின்*

*மாலைகளும் அசைந்தாட வண்டும் ஆட*

*மருங்கெழில்மே கலையாடக் குழையும் ஆட*

*வேல்களெனும் விழிகுழையோ டாடக் காதின்*

*விளங்குதிருக் குண்டலமும் தோடும் ஆட*

*ஆலினமர் பழம்பொருளே ஆடீ ரூசல்*

*அழகுசெறி உருக்குமிணி ஆடீ ரூசல்*

என்பது அவற்றில் ஒரு பாடல். அடுத்த ஏழு பாடல்களில் ஊசலாடினார்கள் என்றே சொல்லி மகிழ்கின்றார். பின்னும் சத்தியபாமை திருமணம் முதலான இடங்களிலும் ஊசலாடினார்கள் என்றே இயம்பிக் கொண்டேகுகின்றார்.

பள்ளியெழுச்சியும் இதுபோல, பாற்கடலில் பள்ளிகொண்டு யோகத் துயில் புரியும் பரந்தாமனை இந்திரனை முன்னிட்ட தேவர்கள் சென்று வணங்கித் துயிலெழுப்புகின்றனர். இவ்விடத்தில் ஆசிரியர் பத்துப் பாடல்கள் கொண்ட ஒரு பள்ளி எழுச்சிப் பிரபந்தமே பாடியுள்ளார். இங்கு கூர்மம், ஆதிமூலம், மீனம், வராகம், நரசிங்கம், வாமனன், இராமன், கண்ணன் ஆகிய அவதாரங்களை முறையாகப் பாடுகின்றார். பல இடங்களிலும் இவர் கூறும் குறிப்பால், கசேந்திரனுக்கு அருள் செய்து வந்த ஆதிமூலத் தோற்றத்தையும் ஓர் அவதாரமாகவே கருதினார் என்று தெரிகின்றது.

*வெற்பினைக் கடைமத்தென*

*வேலையுள் நிறுவிச்*

*சற்பவண் கயிறாகிடக்*

*கடைந்தமிர் தத்தை*

*அற்பமா மசுரரக்*
*கிடாதெமக் குவந்தளித்த*
*அற்புதா அமலா*
*பள்ளியுணர்ந்தரு ளாயே*

நூலில் திருமண நிகழ்ச்சிகள் அதிகமாக வருகின்றன. முதலாவதாக வசுதேவர் தேவகியை மணம் புரிவதிலிருந்து வாணாசுரன் மகள் உடாங்கனையை (உஷையை) அநிருத்தன் மணம் புரிகின்ற வரையில் குறிப்பிடப் பெற்ற பதினைந்து திருமணங்களிலும் மாலையிடுதல், கனலிடை ஆகுதிகள் சமித்துடன் நிறைத்தல், மங்கள நாணினைப் பூட்டுதல், பொரி அக்கினியில் பெய்தல், அம்மி மிதித்தல், அருந்ததி காட்டுதல் என்ற சடங்குகள் தவறாது குறிப்பிடப் பெறுகின்றன.

*அங்கி யின்நிறை யாகுதி பெய்தனர்*
*சங்கு பேரி கழன்றிடச் சாகைமா*
*நங்கை நப்பினை நற்கந் தரத்தினிற்*
*செங்கை மங்கல நாண்செறித் தானரோ.*

*மற்று மாகுதி செய்து வலமுறச்*
*சுற்றித் தேயுவைத் தாய்மலர்த் தாளிறை*
*பற்ற அம்மி மிதித்துப்பல் லாண்டெழ*
*உற்று நோக்கினர் உம்பர் அருந்ததி.*

என்ற பாடல்களில் இவற்றைக் காணலாம்.

பிறிதோரிடம், கண்ணனின் மகனான சாம்பன், துரியோதனன் மகள் இலக்கணையை மணம் புரிகின்றான். அந்த இடத்தில் வரும் ஒரு பாடல்:

*அருமறை யவர்க ளெல்லாம்*
*ஆகுதி செய்யச் சாம்பன்*
*தெரிவைதன் கந்த ரத்திற்*
*சிறந்தமங் கலநாண் சாத்தி*

*அரிவைதன் னுடனே தீயை*
*வலம்வர அம்மி மீதின்*
*மருவமர் குழலி காலால்*
*மிதிக்கவான் வடமீன் கண்டார்.*

என்பது. சில இடங்களில் பாடலின் முடிவில் பலசுருதியும் சொல்லப் பெறுகின்றது.

பாகவத புராணம் கண்ணன் வரலாற்றைக் கூறும் முகத்தால் திருமால் பரத்துவத்தைக் கூற எழுந்தது. ஆதலால் சிவபெருமானும் திருமாலைத் துதித்தலைக் கூறுவது இயல்பாக அமைகின்றது. இந்த இயல்பைப் பல இடங்களிலும் காணலாம். சிவபெருமான் தம்முன் தோன்றிய அரியைப் பன்னிரு நாமமும் நவிற்றித் துதித்தலை,

*கேசவ நமவே நாரண நமவே*
*கிளரொளி மாதவ நமவே*
*மாசறு சுடர்கோ விந்தனே நமவே*
*வண்மைசேர் விண்டுவே நமவே*
*ஏசற உயர்ந்த எழிலுறு மதுசூ-*
*தனநம இடரினை யகற்றும்*
*தேசுறு திரிவிக் கிரமனே நமவே*
*சிறந்திடு வாமனா நமவே.*

என்ற பாடலில் காணலாம். பல இடங்களிலும் சிவபெருமானைக் குறிப்பிடும்போது முறையாக ஆகுவாகனன், தோகை மாமயிற் சண்முகன், கணங்கள் முதலியன தவறாது குறிப்பிடப் பெறுகின்றன. பின்னர் பஸ்மாசுரன் என்னும் வருகாசுரனுக்குப் பரமேசுவரன், "நீ யார் தலையில் கை வைத்தாலும் அவர் அழிவர்" என்று வரங் கொடுக்கவும், அவன் அவர் தலையிலேயே கை வைக்கப் பார்க்கின்றான். அவர் ஓடவும், திருமால் அங்கு தோன்றி அவன் தன் தலையிலேயே கைவைத்து அழியும்படிச் செய்து, "மருளனாகிய அசுரனுக்கு இவ்வரம் அருளலே அவம்" என்று அறிவுறுத்துகின்றார்.

'அம்பிகாவனப் படல'த்தில் அம்பிகையை நந்தகோபன் முதலான யாதவர் சென்று வழிபடுவதைக் குறிப்பிடும்போது,

விநாயகரையும் சண்முகரையும் குறிப்பிடுகின்றார். அங்கு அம்பிகைபாகன் ஆலயமும் உள்ளதாகக் கூறுவர். இதுபோலவே 'நாச்சியார் தேரேறு படல'த்தில் கண்ணன் வராதது கண்டு உருக்குமிணி அம்பிகைக்கு அர்ச்சனை புரிந்து வேண்டுகிறாள். அம்பிகையை அங்கு 'துர்க்கை' என்று குறிப்பிடுகின்றார்.

சரித்திரத்தின் தன்மையால் ஆசிரியர் திருமால் பரத்துவம் கூறும் நிலைமை இருப்பினும், பல இடங்களிலும் சிவனுக்கும் திருமாலுக்கும் வேறுபாடின்மையை நன்குணர்த்திச் செல்வதைக் காணலாம். 'தட்சகப் படல'த்தில் அரிஅரனுடனே, 'உன்னை என்கினரேல் என்னையும் அகற்றினராம். உன்றனைத்தான் யானென உணரார் சாந்தியை உறார்' என்று ஓதுவதைக் காணலாம். 'கயிலாய யாத்திரைப் படல'த்தில் அரிஅரன் இருவரும் ஒருவரையொருவர் துதித்துக் கொள்வதைக் காணலாம்.

*வரையினைத் தனுவாய் வளைத்தருள் முதல்வா*
*நம, உனை மதிக்கிலா அசுரர்*
*திரிபுர மெரித்த சிவநம, இந்து*
*திகழ்கின்ற வேணியாய் நமவே,*
*கரியுரு தனைப்போர்த் தருளுவாய் நமவே*
*கறைமிடற் றிறைவனே நமவே*
*அரகரா நமவே, பசுபதி நமவே,*
*அந்தகாந் தகாநம என்றான்.*

இது திருமால் சிவபெருமானைத் துதித்தது. சிவபெருமான் திருமாலைத் துதித்தது 'கேசவ நமவே' என்ற பாடல் முன்னர்க் காட்டப் பெற்றது.[24] மேலும் சிவபிரான் வருணனைக் கூறும்போது இவர் சைவசம்பிரதாயம் முழுமையும் தழுவிச் செல்வதைக் காணலாம்.

*வானதி பிறைவெண் கூவிளை கடுக்கை*
*சாந்தையோ டெருக்கலர் மத்தம்*
*பூநிறை சடைகள் அசைந்திட நுதலின்*
*அழல்விழி பொருந்திடப் பஞ்ச*

---

24 இந்நூல் பக்கம் 60-ல் காண்க.

*ஆனைந் திகழ உழைமழுக் கபாலம்*
*அழல்கரத் துறமலை யரையன்*
*மானிடத் திலகக் கொடிகுடை வயங்க*
*அரனுயர் விடையின்மேல் வந்தான்.*

*உரககங்கணம் கையில் இலங்கிடச் சூலம்*
*ஒளிவிட உமாபதி விடைமேற்*
*சரியிலாப் பவளக் கிரியென வரவே*
*சங்கொடு தமருகம் முழங்க*
*மரவுரி யுடுத்த சதமுகன் குண்டோ*
*தரன்திரி வாமமா வனுவோடு*
*அரிமுகன் பஞ்ச வாகுவெண் ணீற்றை*
*அணிந்தவர் அன்புடன் அடைந்தார்.*

என்ற பாடல்களில் இப்பண்பைக் கண்ணுறலாம்.

கம்பராமாயணத் தொடரும் கருத்தும் இந்நூலெங்கும் ஒளிர்வதைக் காணலாம். இஃது இயற்கை. பெருநூல் செய்த இவ்வாசிரியர், தம்மினும் பெருநூல் செய்தாரைப் பயின்று செய்ததே மரபு. 'நாடிய பொருள் கைகூடும்' என்ற பாடலைத் தழுவியது முன்னர் காட்டப் பெற்றது. 'வண்மை யில்லையோர் வறுமை யின்மையால்'[25] என்ற கம்பன் பாடலைத் தழுவி எழுந்தது இவண் காட்டப் பெறும் பாடல்:

*மறமில்லை மனந்தனின் ஞானமுற*
*அறனில்லை அதன்ம மிலாதுயரும்,*
*உறவில்லை உறும்பகை யின்மையினால்*
*குறைவில்லைவள நாடியல் கூறரிதே.*

என்பது.

'நாராயணன் எங்கும் இருக்கின்றான்' என்று இரணியன் முன் சொன்ன கம்பர் பாடல்:

25 கம்ப ராமாயணம், பால காண்டம் நாட்டுப் படலம் - 53

*சாணினும் உளன்ஓர் தன்மை*
*அணுவினைச் சதகூ றிட்ட*
*கோணினும் உளன்,மா மேருக்*
*குன்றினும் உளன்இந் நின்ற*
*தூணினும் உளன்,நீ சொன்ன*
*சொல்லினும் உளன்இத் தன்மை*
*காணுதி விரைவில் என்றான்*
*நன்றெனக் கனகன் நக்கான்*

என்பது. இதனை நினைந்த வண்ணம்,

*நொய்ய தாகும் அணுவினை நூறெனக்*
*கொய்து விட்ட கோணங்கள் தோலுளன்*
*வையம் வானம் வடவரை மீதுளன்*
*மெய்யுட் டோன்றி விளங்கிய மாமுதல்.*

*நிகரி லாத என்நெஞ்சி லுளன்இவன்*
*புகலும சொல்லி னுளன்,மணிப் பூணுளன்*
*இகழ்வில் உன்னி தயப்பங் கயமெனும்*
*முகையின் விஞ்சும் பொருட்டுள மூர்த்தியோன்.*

என்ற பாடல்களை அமைக்கின்றார் இந்நூலாசிரியர். இவற்றோடு கம்பர் பாடலை ஒப்புநோக்கி உணர்க.

*'நம்பியைக் காண நங்கைக்*
*காயிரம் நயனம் வேண்டும்'*

என்ற கம்பர் பாடல் இவ்வாசிரியர் வாக்கில்,

*மாயன் வடிவின் னலம்மகிழ்ந்*
*தினிது நோக்க*
*ஆயிழை உனக்கு விழிஆயிரம்*
*வேண்டும்*

என்று வருகின்றது. இரண்டையும் ஒப்புநோக்குக.

இந்தப் பாகவதம் திருமாலின் பத்து அவதாரங்களையும் விவரிக்கின்றது. முதல் ஏழு அவதாரங்களையும் தனித்தனிப் படலங்களில் குறித்துக் கூறிய பின்னர் நாரத முனிவன் கண்ணன் பிறப்பு முதல், அவனே உருக்குமிணிக்கேற்ற மணவாளன் என்று கூறுவது வரையில் பல படலங்களால் விரித்துரைக்கின்றார். இதுவரையில் நூலின் பாதிப்பகுதியாகும். கண்ணன் மணம் செய்தபின் நடைபெற்ற நிகழ்ச்சிகள் அடுத்த பகுதி. 'வைதிகப் படல'த்தில், கண்ணன் உருக்குமணியுடன் ஓர் யாகம் செய்யத் தொடங்குகின்றான். அப்போது ஓர் அந்தணன் தோன்றி, "என் பிள்ளைகள் மூவர் பிறந்தவுடன் உடலோடு மாயையால் மறைந்து விட்டார்கள். என் மனைவி நாலாம் பிள்ளை பெறப் போகின்றாள். இப்பிள்ளையையேனும் மாயையால் மறையாமல் நீ காத்தருள்' என்று வேண்டலும், பார்த்தன் அதற்கு உறுதியளிக்கின்றான். அப்பிள்ளையும் பிறந்தவுடன் மறைந்தது கண்ட வேதியன் பார்த்தனுடைய வில்லாற்றலைப் பழிக்கின்றான். கண்ணனிடம் முறையிட, அவன் அவ்வேதியனையும் பார்த்தனையும் தேரில் ஏற்றிக்கொண்டு விரசையாற்றங்கரையில் இருவரையும் நிறுத்திவிட்டு, அப்பால் வைகுந்தம் புகுகின்றான்.

அங்குக் கீழ்த்திசையில் சண்டப்பிரசண்டர், தென் திசையில் பத்திரசயத்திரதர், மேல் திசையில் சயவிரதர், வடதிசையில் நாதாவிதாதா காவல்; உட்சென்று அங்கு அச்சுதனைக் காண்கின்றான். "அந்தணன் சிறுவனைத் தருகின்றேன். நீ அவனியில் தச அவதாரம், இந்துவின் வதனத் தெண்மர் தேவியர் மகிழ்ந்திடக் காட்டுதி" என்றான். இவனும் மச்சாவதாரம் முதலான எல்லா நிகழ்ச்சிகளையும் விரிவாய் நடித்துக் காட்டுகின்றான். தனது அவதார நிகழ்ச்சிகளையும் விரிவாய் நடித்து மறையவன் புதல்வனுக்காக இங்கு வந்து நிற்பதையும் நடித்துக் காட்டி, மேல்வரப் போகிற பரியுருவாகிய கல்கி அவதாரத்தையும் நடித்துக் காட்டுகின்றான். விமலன் மகிழ்ந்து சிறுவனைத் தரவே, பெற்று வந்து அந்தணனிடம் கொடுக்கின்றான்.[26]

26 வைணவ உரைகளில் இந்த வரலாறு வேறு மாற்றங்களுடன் காணப் பெறுகின்றது. அங்கு நான்கு பிள்ளைகளை மூன்று தேவியரும் மறைத்ததாகவும், அவர்கள் கண்ணன் அவதாரத்தை இங்குள்ளாருக்குக் காட்டுவதற்காக இந்த யுக்தியை மேற்கொண்டதாகவும் கூறுகின்றனர். மேலும் பார்த்தனும் பரந்தாமனும் மட்டிலும் அங்கு வந்ததாகக் குறிப்பு. பார்த்தன் வைகுந்தம் புகுவதற்குப் பக்குவப்படாததால் அவனை விரசையின் இக்கரையிலே விட்டுவிட்டுத் தான் மட்டிலும் உட்புகுந்து நான்கு பிள்ளைகளுடன் வெளிவந்ததாகக் குறிப்பு.

இங்ஙனம் கண்ணன் அங்கு நடித்துக் காட்டிய கல்கியவதாரத்தையும் 'கற்கிப் படலம்' என்ற தனிப்படலமாக இறுதியில் விரித்துரைக்கப் பெறுகின்றது. சனமேசயனுக்குப்பின் தொடர்பாகப் பல தலைமுறை ஆட்சி செய்வோர் வரலாறுகள் வரையப் பெறுகின்றன. இவ்வாறு பெயரும் ஆட்சிக் காலமும் கூறுகின்ற பாடல்கள் 24. பிறகு உலகில் ஆட்சியும் தருமமும் எப்படிக் கீழாகும் என்பதை,

*தரும்மில் மிலேச்சர் மரபினோர் அநேகர்*
*தரையினை யாளுவர், தம்மில்*
*துரிதம் வந்துற வேஅமரிடை அநேகர்*
*மடிந்திடச் சூத்திரர் முதலாய்,*
*வருண மற்றுயரும் சங்கர சாதி,*
*மறுவிலா அனாமிக ராள்வர்*
*அருமறை புராண சாத்திரம் எவையும்*
*அருமறை நெறிஅகன் றிடவே.*

*வருணமும் இலாமல் மறைநெறிப் படியே*
*மணம்செயும் கருமமும் அகல,*
*அரிவையர் பலரை யணைந்திட அதுவும்*
*அறன்எனச் சம்மத மாகிப்*
*பருவமோ ரெட்டில் சிசுவைமங் கையர்கள்*
*பயந்திடப் படியிடை நரர்க்குப்*
*புருடவா யுகசொல் வருடமுப் பதுமாய்த்*
*தும்பைபோற் குறுகும்பூ மரங்கள்.*

*தருமமெய் பொறைசற் குணம்அரு ளீகை*
*தவந்தெய்வம் பேணுதல் எல்லாம்*
*இருநிலத் தகலக் கதம்வதை முயற்சி*
*இகழ்ச்சிபொய் வஞ்சனை யதனம்*
*மருளிவை மலிய மலர்மகள் வாணி*
*அகன்றிட மதியிலாக் கயவர்*

*திரளுறு வரியினும் அதிகமாய்ப் புவிமான்*
*தடுக்கிட மிடைகுவா ரன்றே.*

என்பவை அவை.

இவற்றின்பின் அவந்தி தேசத்தின் கம்பளக் கிராமத்தில் பார்ப்பனர் குலத்தில் 'விண்டுசித்து' என்பவன் மகனாய்க் கற்கி பிறப்பான். அவன் தங்கையானவள் கயவர்களை அழிப்பாள். கலியுகம் நீங்கும். கிரேதாயுகம் பிறக்கும். தரும வழியில் நிற்கும் மனிதர்களே எஞ்சுவார்கள். இவ்வாறு கதையை முடித்துப் பின் பாகவதம் வந்த வழியையும் சொல்லுகிறார். அனந்தன் முதலாக விதுரன் வரை சொல்லப்பட்டது என்கின்றார்.

மீன் முதலாக தெய்வத்தன்மை பொருந்திய கிருஷ்ணாவதாரம் வரையில் வளர்ந்து அபிவிருத்தியடைந்த அவதார முறை, அடுத்ததாகிய குதிரை வடிவமுடைய கல்கியவதாரத்தில் கீழிறங்கி விடுகின்றது. இனி வரப்போவதையும் வரையறை செய்து புராணங்கள் உணர்த்துவது இன்று படிக்கும் நமக்கு பெரு வியப்பாய் உள்ளது. இதை நாம் புரிந்து கொள்வது எளிதன்று. உலகத்தில் இறுதி ஊழியிலே கடவுள் குதிரையாக வந்து, அதர்மம் எல்லாம் அழியச் செய்து தருமம் மீண்டும் புதிய யுகத்தில் தலையெடுக்கச் செய்கின்றார். அணு யுகத்தையும் அணுச்சக்தி ஒரே விநாடியில் பல லட்சம் மக்களை அழித்த உண்மை நிகழ்ச்சியையும் நேரில் உணர்ந்த நாம் எதிர்காலத்தில் இப்படி நடக்கப் போவதைப் புராணத்தில் படிக்கும்போது சிறிது சிந்திக்கவே செய்வோம். பறக்கும் தட்டுகள் பூவுலகில் பறக்கின்றன. சிலர் கண்டார்கள். இவை பூவுலகத்துக்குச் செவ்வாய்க் கோளிலிருந்து வருபவையோ என்ற அச்சம் அமெரிக்க அறிவியலறிஞர்களின் மனத்தில் உள்ளது. பூவுலகில் தெரிந்த எந்த ஆற்றலும் அப்பறக்கும் தட்டுகளைப் பார்க்க இயலவில்லை. ஒருக்கால் இது கல்கியவதாரத்தின் முன்னோடியாக இருக்கலாம் அல்லவா? எவராலும் அறிந்து சொல்ல இயலவில்லை.

**காலம்:** நூல் அரங்கேறிய காலத்தை 'திருவரங்கப்படலம்' 154-ஆம் பாடல் திட்டமாய்க் குறிப்பிடுகின்றது.

*ஆயும் மறையோ ரெண்ண வரும்சகாத்தம்*

*ஆயிரத்து நானூற்றோ டறுபத் தஞ்சாம்*

*தூயசுப கிருதுநாளின் முதன்மா தத்தில்*

*துலங்குகுரு வாரத்துத் திராட நாளில்*

*நேயமுடன் நெல்லிநகர் வரத ராசன்*

*நிகரிலரங் கத்திலர வணையில ஓங்கும்*

*நாயகன்முன் அறிஞர்மகிழ்ந் திடவே வாசு*

*தேவகதை அரங்கேற்றி நலனுற் றானே.*

என்பதில் காண்க. அரங்கேற்றிய காலம் சகாத்தம் 1465, அதாவது கி.பி. 1543, சுபகிருது ஆண்டு, சித்திரை மாதம், குருவாரம், உத்திராட நட்சத்திரம். ஆதலால் வாசுதேவ கதை செய்த வரதராசர் (அருளாளதாசர்) காலம் 16-ஆம் நூற்றாண்டின் இடைப்பகுதி.

நூலகத்துள்ள மற்றொரு குறிப்பும் கருதத்தக்கது. தில்லை கோவிந்தராசர் துதிப்பாடல் (திருவரங்கப்படலம் - 68).

*நச்சணி நகில்வீ றியஉமை கொழுநன்*

*நடஞ்செயக் கமலனோ டிமையோர்*

*நிச்சலும் முராரி தனைத்தொழும் பதியை*

*முன்புபோல் நிறுவிய நிருபன்*

*அச்சுத ராயன் வணங்கிட அரவின்*

*அழகிய தில்லையம் பதிக்கே*

*மைச்சுடர் வரைபோல் வயங்குகோ விந்த*

*ராயன்மா மலரடி வாழி.*

இவண் குறிப்பிட்ட அச்சுதராயன் 1629-இல் விசய நகரப் பேரரசின் மன்னர் பதவி ஏற்றவன். இவன் காலத்தில் ஆசிரியர் நூல் செய்யத் தொடங்கி 1543-இல் முடித்தார் என்று தெரிகிறது.

## (3) திருக்குருகை மான்மியம்

*ஆசிரியர்:* இதன் ஆசிரியர் திருக்குருகைப் பெருமான் கவிராயர் என்பவர். இவர் நம்மாழ்வார் பிறந்த ஆழ்வார் திருநகரி என்ற திருக்குருகையில் வேளாள மரபில் பிறந்த ஒரு பெரும் புலவர். இலக்கணத்தில் மிகவும் வல்லவர். இவர் யாப்பு, பொருள், அணி என்ற மூன்றுக்கும் உரிய இலக்கணங்களும் அவற்றுக்கு உதாரணச் செய்யுட்களும் பாடிப் பெருமை பெற்றவர். இவற்றையெல்லாம் நம்மாழ்வார் பெயரிலேயே பாடியுள்ளார். யாப்புக்கு இவர் பாடிய இலக்கணம் 'மாறன்பா-பாவினம்' என்பது; பொருளுக்கு 'மாறன் அகப்பொருள்' ஆகும். அதற்கு எடுத்துக்காட்டாகத் 'திருப்பதிகக் கோவை', அணி இலக்கணத்துக்கு எடுத்துக்காட்டாக 'மாறன் அலங்காரம்'. இவை யாவும் அச்சு வாகனம் ஏறியவை. இவர் 'திருக்குருகை மான்மியம்' என்ற பெயரில் ஒரு புராணம் செய்தார். இது நம்மாழ்வாரின் அவதாரத்தலமாகிய திருக்குருகூருக்குப் பெருமை சேர்ப்பதாக அமைகின்றது.

நூலுக்கு முன்னுரையாக சில சொற்கள். பெருங்காவியமாகிய இது முழுமையாகக் கிடைக்கவில்லை. கடவுள் வாழ்த்து, பதிகம் என்ற உறுப்புகளுக்குப் பின் 28 சருக்கங்கள் இருந்தன என்று உ.வே.சா. ஐயரவர்களின் ஏட்டுப்படியொன்றில் குறிப்பிடப் பெற்றுள்ளது. மதுரைத் தமிழ்ச் சங்கத்தின் செந்தமிழ்ப் பத்திரிகைப் பிரசுரமாக இதன் பகுதி 1938 வரை பல ஆண்டுகள் வெளிவந்து 574 பக்கங்களில் முடிவடைந்தது. ஐயரவர்கள் உதவிய ஒரு கைப்படியில் 26-ஆம் சருக்கம் 83-ஆம் செய்யுள் வரையிருந்தது. பின் மாமணவாள ரங்காச்சாரியார் 83-88 பாடல்களைப் படியெடுத்துத் தொடுத்து அச்சருக்கம் முழுமை அடைந்தது. அடுத்த இரு சருக்கங்கள் மாறன் திருவவதாரச் சருக்கம், மவுன நீங்கு சருக்கங்கள் என்றும், மொத்தம் 3030 பாடல்கள் என்றும், ஐயரவர்களின் ஏட்டுப்பட்டியின் முகப்பேட்டில் கூறப்பெற்றுள்ளது. ஆனால் 26 வரம் பெறு சருக்கம் வரை பாடல்கள் 2621 மட்டுமே அச்சாயின. பின்னால் 'மாறன் திருஅவதாரச் சருக்கம்' என்ற தலைப்பில் 48 பாடல்கள் அச்சாயின. ஆனால் இப்பகுதி மட்டும் தனியாக 'மாறன் திருவவதாரச் சரிதை' என்ற பெயரில் தனி வரலாறாகவும் ஏடுகளில் காணப் பெறுகின்றது.

அவையடக்கமாகக் கூறும்போது தமிழின் ஐந்திலக் கணங்களையும் குறிப்பிடுகின்றார். சிறப்பான அகப்பொருள் நூலும் மாறன் அலங்காரமாகிய அலங்காரங்களுக்கும் இவர் செய்துள்ளமையும் ஈண்டுச் சிந்திக்கத் தக்கது.

*எழுத்துச் சொற்பொருள் யாப்பலங் காரமென் றிசைத்தே*
*வழுத்தும் அஞ்சதி காரமும் ஆசறுத் தறியேன்*
*பழுத்த பாவலர் பாதக மலமென் முடிமேல்*
*அழுத்துநன்னெறி யாசறக் கற்றதே அறிவேன்*

இம்மான்மியத்தைப் பராசர முனிவர் தம் புதல்வர் வியாச முனிவருக்குக் கூற அவர் சுகருக்குச் சொன்னார். இவ்வாறு அந்த வடமொழி நூலை, தமக்கு ஆதிநாத பட்டர் மொழிபெயர்த்துக் கூற, அதனைக் கொண்டு தாம் தமிழில் பாடியதாக இவர் கூறுகிறார் (11). இதைத் தமிழில் கூறிய புலமையால், 'சடையன்' என்ற பெயருடைய தாம் திருக் 'குருகைப் பெருமாள் கவிராயர்' என்று பெயர் பெற்றதாகவும் கூறுவர்.

*இருக்குமுதற் பனுவலினால் இயற்றமிழ்தேர்*
*நாவீறன் என்னும் மேன்மை*
*அருட்புயலைப் புகழ்புலமைத் திருக்குருகைப்*
*பெருமாள்பே ரன்பு கூறும்*
*தருக்குலவும் பொழிற்குருகா புரிவணிகன்*
*சடையனிதைத் தமிழாற் சாற்றித்*
*திருக்குருகைப் பெருமாள்வண் கவிராசன்*
*எனப்புனைபேர் சிறந்த தன்றே*

என்றது காண்க. அடுத்த பாடல் அரங்கேற்றிய காலம் கொல்லம் 723 (கி.பி. 1548) என்று கூறும்.

*அறந்திகழாண் டவைஎழுநூற் றிருபான் மூன்றில்*
*அணிகிளர்காரத் திகைமாத மெட்டில் வாழ்வு*

*சிறந்திடுதிங் களினாளுத் தரத்தில் ஏகா*
*தெசிமகா முகுந்தமிவை திருத்த முற்றத்*
*துறந்தவரெண் மகிழ்மாறர் திருமுன் னாதிச்*
*சுருதியுடன் மிகுதியுஞ்சொற் றமிழின் வாய்மை*
*பிறந்தபெருங் காப்பியமும் தெரிந்தோர் கேட்கும்*
*பெற்றியுடன் அரங்கேற்றப் பெற்ற தன்றே.*

என்றது காண்க.

பதிகம் எனத்தக்க ஏழு பாடல்களும் இதன்பின் உள்ளன. பொதுவாய் எல்லாப் புராணங்களும், பின்னால் உள்ள சருக்கங்களின் பெயரை ஒன்று விடாமல் நிரலே பதிகத்தில் கூறும் மரபு உண்டு. ஆனால் இப்பதிகம் அவ்வாறு அமையவில்லை. சருக்கங்கள் பல சொல்லப் பெறவில்லை. சொன்னவையும் முறையாக அமையவில்லை. இறுதி இரு பாடல்களில் 'நாம் காரியார் சேயாய், நம்மை நாம் புகழ்வான் வருகுவம்' என நவின்று, எம்மையாண்டவன் புகழ்ச் சடகோபனாகி, வேதம் நாலையும் நால்வகைப் பனுவலாய் விரித்தவாய டையும் புகல்வாம்' என்கின்றார்.

**நூல்:** நூல் வாழ்த்தோடு தொடங்குகின்றது. 'வாழ்த்து' என்ற பாடல் கடவுள் வணக்கத்துக்குப் புறம்பாகத் தொடக்கத்தில் காணப் பெறுகின்றது.

*வாழி வாழிகா னிலமும்மும்*
*மாரியின் வளனும்*
*வாழி வாழிஇல் லாமும்நல்*
*லாற்பெரு வனப்பும்*
*வாழி வாழிநா லாயிரப்*
*பனுவல்நான் மறைநூல்*
*வாழி வாழிசீ பராங்குச*
*ஆணை வைகலுமே.*

கடவுள் வாழ்த்துப் பகுதி இரண்டே பாடல்கள். முதற் பாடல் 'திருமால் காப்பு.' இரண்டாம் பாடல் 'குரு வணக்கம்.' காப்புச் செய்யுளில் முத்தொழில் செய்யும் மூவரையும் குறிப்பிடுகின்றார்.

*பூத்தா தாமரையயன் படைக்கப் பொற்புடைக்*

*கூத்த னாகியசிவன் துடைக்கும் கொள்கைசேர்*

*ஏத்துநற் கரியபல் லுலகை இன்புறக்*

*காத்தமால் குருகைமான் மியத்தைக் காக்கவே*

இவ்வாறு மூவரையும் குறிப்பிடுதல் இவரது சமரச மனப்பான்மையைக் காட்டுகிற ஒரு நல்லியல்பு. பின்னரும் 'பரசுபாணியனும் அயனுமாம் சொரூபம் பயின்ற கேசவன்' (296) என்று கூறுவர். தம் குருநாதரை 'ஆரியனென எதிர்த்து அரிய பேதைமையும் நீக்கியோன்' (3) என்று குறிப்பிடுவர். பதிகம் என்ற பகுதி கடவுள் வாழ்த்தின் பின் 17 பாடல்கள் கொண்டது. எனினும் இதன் முதல் 10 பாடல்கள் காப்புடன் சேர்ந்து பாயிரம் என்னத் தக்கவை. இப்பகுதியின் முதல் பாடலில் இவர் சொல்லும் கருத்து, சைவ சமயத்தில் எங்கும் சொல்லப் பெறும் கருத்தையொத்துள்ளது.

*பூவாகிநறு மணமாய்ப் பொன்னாகி யும்ஒளியாய்ப்*

*பாவாகியும் இசையாய்ப் பாலாகி யுஞ்சுவையாய்*

*மேவா ருயிர்க்குயிராய் வேறுவே றாகிநின்ற*

*மூவா முழுமுதலின் மூத ஏறிவாரே*

இதனை, பின்வரும் சிவகாம சுந்தரி துதியுடன் ஒப்புநோக்கி உணர்க (வேறு புராணப் பாடல்):

*சொற்பொருளும் உடலுயிரும் சுடரொளியும்*
*விரைமலரும் சுவையும் பாலும்*
*நிற்கும் நிலை எனத்தெளிந்து சிவத்தில்*
*அனன்னிய மாகி.*

இவர்கூறும் அடியார் வணக்கம் சிறப்பானது.

*கடியார் பசுந்துளவக் கார்மேனிச் செங்கண்*

*நெடியானை எட்டெழுத்தாய் நின்றானைப் புள்ளின்*

*கொடியானை என்னுளத்துட் கொண்டானை ஏத்தும்*

*அடியார் அடியார் அடியார் அடியேனே.*

என்பது காண்க. இப்பகுதியில் பல பாடல்கள் குருகையில் உள்ள

பொருநைத் துறையான சங்கணித் துறையை வருணிக்கின்றன. இவ்வாசிரியருடைய வருணனைகளில், ஒரே அமைப்புடைய எளிய தொடரை வைத்துப் பல பாடல்களை அடுக்கி முடிப்பது ஒரு வழக்கம். 'விரசைமேற் கொள்வதுந் திடனாமே' என்ற முடிவுடைய பாடல்கள் ஆறு; பின் வருவது ஒன்று (120);

பூவின் மேற்கொளும் திருமகள்
கலந்தமெய்ப் பொருணாமம்
நாவின் மேற்கொளும் நாவலர்
நால்வகைத் தெனலாகும்
பாவின் மேற்கொளச் சங்கணித்
துறையெனப் பகர்ந்தாலத்
தேவு மேற்கொளும் விரசைமேற்
கொள்வதுந் திடனாமே.

என்பதில் இப்பண்பைக் காணலாம்.

'புறநகர் வாழ்த்து' என்ற அடுத்த சருக்கத்தில் 'உலகரயதன் வாமன், அருகன், புத்தன், நானே பிரமம் என்பான்' ஆகிய சமயத்தாரைப் பல பாடல்களால் கண்டிக்கின்றார். 'நானே பிரமம்' என்பாரைக் கண்டிக்கும் பாடல்கள் நூலுள் பல உள்ளன. 14 பாடல்களில் தசாவதாரங்களையும் போற்றியுள்ளார். மீனம், கமடம், கேழல், நாரசிங்கம், குறள், பரசுராமன், வென்றித் தனுராமன், பெலதேவன், கோபாலக்குழந்தை, துரகதமாந் தனிமுதல்வன் என கோபாலனுக்கு மட்டிலும் 5 பாடல்கள்; இப்படியே நூலுள் பிற இடங்களிலும் அவதாரங்களைச் சந்தர்ப்பம் நேர்ந்தபோதெல்லாம் போற்றியுரைப்பர். வானரங்களின் செயல்கள் மிகவும் அதிகமான பாடல்களில் (224-256) கூறப் பெறுகின்றன. பெண்களின் தன்மையை உரைக்கும்போது பெருங்காப்பியத் தன்மைக்கேற்ப, அவர்களின் கற்பிலக்கணம் அடுத்த சருக்கத்தில் 11 பாடல்களில் பகரப்பெறுகின்றது. வேளாளர், வணிகர், மள்ளர், வேதியர் தன்மைகள் முறையாகத் தொடர்ந்து பல பாடல்களில், முன்னுள்ள பேரிலக்கியங்களின் பொருளைத் தழுவியே எங்கும் பாடுவார்; கிள்ளைகள் வேதமும் தமிழும் பாடுகின்றனவாம்.

*போத மேதகப் பூரணன் பூமகள்*
*நாத வானெனக் கண்டவர் மாளிகை*
*வேத வாய்மையும் மெய்த்தமிழ் வாய்மையும்*
*கீத வாய்மையும் கிள்ளை மிழற்றுமே (462)*

அடுத்து, 'கோயில் வருணனை' என்ற சருக்கத்தில் ஒலியின் பிறப்பு என்று தொடங்கி, வாக்கு, எழுத்து, சொல், பொருள், அகம், புறம், வெண்பாமாலை, படலம், ஈராறு, யாப்பு, அலங்காரம், இசைத்தமிழ், நாடகத்தமிழ் என்பது முடியக் கூறி திருப்புளி வருணனையோடு நிறைவு செய்கின்றார். அடுத்த சருக்கத்தில் சந்தப் பாடல்களும் மடக்கும் அதிகமாக அமைத்துள்ளார்; நூலெங்குமே சந்தப் பாடல்களைக் காணலாம். பரமபத வருணனையில் பரமபதநாதன் அமைந்துள்ள தோற்றம் பத்துப் பாடல்களால் பாங்குற வருணிக்கப் பெறுகின்றது. அங்குள்ள மரங்களைக் கூறும்போது நான்கு பாடல்களில் அடைமொழி இல்லாமலே கூறுவது சுவைபட உள்ளது (719-722).

*தில்லியம் பரிசாதம் தேவதாரம் மந்தாரம்*
*சல்லிய கரணிசாலி சந்தகில் ஓமைகாட*
*வல்லிமல் லிகைஅசோகு வலம்புரி மாழை வாழை*
*நெல்லிவெண் நாவல்பூவை ஞாழல்ஏலந் தற்கோலம்.*

*மாதவி சூரல்வேரல் மராமரம் பலவுகொன்றை*
*சூதம்ஆம் பிரம்பலாசு தோன்றிலா தளைஇருப்பை*
*தாதகி நாளிகேரந் தணக்கில வங்கங்கன்னல*
*கேதகை குல்லைமுல்லை கிஞ்சுக மால்லம்வில்வம்.*

*வன்னிகுற் குறுக்கொ முந்து*
*மகிழிரு வேரி வெள்ளில்*
*கன்னிகா ரங்கு ருந்து*
*கடுகநீ தகிசெ ருந்தில்*

பன்னிபுன் னாகம் பூகம்
பாதிரி நமைவெட் பாலை
சன்மலி பகன்றை பூல்வேற்
காமரா விரைமஞ் சட்டி

கடம்புகா ரத்துத் தாலங்
களங்கருங் காலி சீந்தி
அடம்பர சாச்சா வெட்சி
அழிஞ்சில்சீ ரகம்உ ழிஞ்சில்
வடந்தரா எலுமிச் சிஞ்சி
அரிசன மாஞ்சி யென்றே
இடம்பயின் றனவா யேனை
யவற்றோடு மெண்ணின் றாயே.

அண்ட உற்பத்திச் சருக்கம், புராண லட்சணம் என்பதற்கேற்ப உலகத் தோற்றத்தை உரைக்கின்றது. நரகத்தைக் கூறுமிடத்து என்னென்ன பாவம் செய்தோர் நரகில் உழல்வார் என்பது 40 பாடல்களால் கூறப்பெறுகின்றது. அகம்பிரமம் என்பவரும் இத்தீவினையால் நரகத்தில் உள்ளனர்.

மிக முயன்று எழுதி வைத்த ஏடுகளைத் திருடுவோர், கற்றிடாததையும் கற்றதாய் மேற்கொண்டு உரைப்பவர், குருத்துரோகிகள், வயிற்றுக்காகக் கவிபாடி பின் கவிஞர்கள் என்று பெயர் வாங்கினோர் - இவர்கள் போன்றவரும் நரகில் உள்ளனர்.

கடவுளா மெனவே குரவரை மதித்துக்
களைகணாக் கற்றநூல் பனைமா
மடல்களிற் கரமு மெருத்தமும் பாடும்
வழுந்தவே கங்குலும் பகலும்
சுடர்நுதி வயிர வூசியாற் பொறித்துத்
தொகுத்தபொத் தகங்களைக் கரவிற்
படரிரு ளிடைக்கன் னுவிற்கவர் பவராய்ப்
படுபழி படைத்தபா தகத்தோர் (987)

*கற்றிடா ததையும் கற்றதாய் மேற்கொள்*
*கரவொடும் கவிசிறி துரைப்பத்*
*துற்றுளார் முழுதுடை யம்யாம் அவற்றிற்*
*கொண்மையோம் எனஅவை அடக்கப்*
*பெற்றுளான் கழகத் துரைத்திடாப் படுபின்*
*பேணியே அவர்கள்பா லவற்றைத்*
*தெற்றென வுணர்ந்து கற்றிடா திடரே*
*செயத் துணிந் துழல்படி றுடையோர் (988)*

*கன்ன பரம்பரை முறையேஇ லக்கணமும்*
*இலக்கிய மும்கற் பிப்போர்கள்*
*சொன்ன வரும்பதங் களினைச்சிறைப் புறத்தும்*
*துன்னின ராய்த்துணிந்தா ராய்ந்த*
*பின்ன ரவைக்களத் தெரிந்துபி ணங்கினராய்*
*வாதுசெயப் பெற்ற காலை*
*இன்ன திதுவென விஃதென் றிறுமாந்தி*
*குருத்து ரோகிகளா மீனர் (990)*

*பொற்புடைச் செந்தமிழ் தெரிந்துசொன் னலமும்*
*பொருணல மும்புணர் வதாகச்*
*சிற்பரன் மேலுயிர்க் காக்கங் குறித்தறிஞர்*
*அணிபெறவே செறிந்த யாப்பை*
*அற்ப ரெனத்திரி நரர்தம் பேரினொடும்*
*ஊரினை வைத்தவி ழுக்காகத்*
*தற்கரப் புன்கவிக ளெனப்பிறர் சிரிப்பக்*
*கொடுந்துயிர்க் குத்தவறு பூண்டோர் (991)*

என்ற நான்கு பாடல்களிலும் இச்செய்தியைக் காணலாம்.

'பிரமன் தோத்திரச் சருக்கம்' என்ற அத்தியாயத்தில் பல துதிப்பாடல்கள் உறுப்புகள் பெற்ற பயன் இறைவனுக்கு ஆட்செய்வதே

என்று பல உறுப்புகளையும் சுட்டிக் கூறுகின்றார். ஒரு பாடல்;

*நாவார வேபுகழ்ந்து*
*நாராயணா நமவென்று*
*ஓவா உரையினொடுங்*
*கண்ணீ ரெம்நனைப்ப*
*காவார் மலர்பறித்துக்*
*கண்ணாகிநின் காற்கமலந்*
*தூவாதார் கையினையும்*
*கையென்று சொல்வாரோ?*[27]

அடுத்து இங்கு சித்திரகவிகள் பலவற்றையும் அமைத்துள்ளார். கொம்பும் காலும் ஒன்றும் இன்றி வந்த நிரோட்டகம், அதில் பிற வகைகள், மடக்குகள், வல்லினம், இடையினம், மெல்லினத்தால் வந்த பாடல்கள் முதலியன இங்குக் காணப்பெறும். 'திருவாராதனச் சருக்கம்' திருமாலின் பூசைக் கிரியைகளை விரிவாகக் கூறுகின்றது. 'துணைப்படை வதைப்படு சருக்கம்' என்பது போரின் வருணனை. மக்கள் செல்வம் பற்றிப் பெருங்கவிஞர் அனைவருமே பாடுகின்றனர். இவரும் பாடுகிறார் (2550);

*மைந்தர் மூரல்வாய் முத்த*
*முண்ணாவாய் வாயோ*
*மைந்தர் சொற்கொளாச் செவிகளுஞ்*
*செவிகளோ, மழலை*
*மைந்தர் சீரடிச் சுவடுழா*
*மார்புமோர் மார்போ,*
*மைந்தர் காட்சி கண்டின்புறாக்*
*கண்களும் கண்மலரோ*

நூலெங்கும் சந்தப் பாடல்கள் நிரம்ப அமைத்துள்ளார். இவர் அருணகிரியார் திருப்புகழை அதிகம் பயின்றவர் போலும். அதே அமைப்பில் பல இடத்தும் பாடல்களை அமைத்துள்ளார்.

27 சிலப்பதிகாரத்திலுள்ள 'நாவென்ன நாவே, செவியென்ன செவியே' என்று முடியும் பாடல்களை நினைக்கச் செய்கின்றது.

பூதவிநோத நம்பி கோதமனார் மடந்தை
பூதல மேல்விழுந்த துயரேதீர்
பாதவிநோத நம்பிபூமகன் மேவுநம்பி
பார்மகண் மேவு நம்பி னுறவோர்சோ
வேதவிநோத நம்பி யாடகனி வாயுண்ட
வீரவிநோத நம்பி குழல்வாய்வேய்
நாதவிநோத நம்பிசீர் புகழ்வாய் மையன்பர்
நானில மீது வந்து பிறவாரே
(2600)

நீதிப்புராணமறை போதில் போதமவை
நேசித்த கேள்வியவை வழியாயே
சோதி சொரூப ரூபத்த ராகியொளிர்
சோபைப் பொன் வீடுதனி . . . . .
னாதிப் பிரானெனவு மாழிப் பிரானெனவும்
ஆசைப் படாமலுன தடிபேணார்
சாதித்த தேவரடி பூசிப்பதா லுறுதி
சாதிப்ப தேதிவர்கள் அறியேனே
(2619)

என்பன காண்க.

## (4) கூடற் புராணம்

மதுரை மாநகரில் கோயில் கொண்டு எழுந்தருளியுள்ள கூடலழகர் கோயிலுக்குரியது இந்தப் புராணம்; ஆசிரியர் பெயர் அறியக்கூடவில்லை. இஃது 16-ஆம் நூற்றாண்டுக்குரியது. இந்நூல் பற்றிய விவரங்களை ஈண்டுக் காணலாம்.

**கூடல்:** கூடலழகர் திருக்கோயில் மதுரை மாநகரில் உள்ளது. இது 108 வைணவ திவ்விய தேசங்களுள் ஒன்று. இத்திருக்கோவிலுக்கு இரண்டு பாசுரங்கள் உள்ளன. ஒன்று பெரிய திருமொழி 9.2:5; மற்றொன்று நான்முகன் திருவந்தாதி 39.

எத்தனையோ பெயர் விளக்கமில்லாத பல சிறு தலங்கள் ஆழ்வார் பதிகங்கள் பெற்றிருக்க சிறப்பான தலைநகரிலுள்ள இத்தலம் எந்தப் பதிகமும் பெறாதது வியப்பே. மதுரை மீனாட்சி சோமசுந்தரக் கடவுள் கோயிலுக்கு அன்று முதல் இன்று வரை இருந்து வருகின்ற பெருஞ் சிறப்பால் இது புறக்கணிக்கப் பெற்றது போலும். எனினும் பண்டைத் தமிழ் நூல்களில் **இருந்தை, இருந்தையூர், இருந்தவளமுடையார்** என்று சிறப்பிப்பது இத்தலத்தையும் இங்கு எழுந்தருளியுள்ள திருமாலையுமே என்று பேராசிரியர் மு. இராகவையங்கார் விளக்குவார்.[28]

**ஆசிரியர்:** இந்நூலாசிரியரைக் குறித்து யாதும் தெரியவில்லை. ஆயினும் இந்நூலே இவருடைய பெருஞ்சிறப்பை நன்கு உணர்த்தும், நூல் முழுதும் இவர்தம் சொந்தப் படைப்பாகும். பெரியாழ்வார் மதுரைக்குப் போந்தமையும் பாண்டியன் கொண்டாட வந்த கிழியறுத்தலையும் கூறுகின்றன. இறுதி இரு சருக்கங்களால் இதனை நன்கு தெளியலாம்.

இவர் வடமொழியிலும் தமிழிலும் புலமை மிக்கவர் என்பதை நூலால் நன்கு அறியலாம். வேத வேதாகமங்களில் மிக்க மதிப்பும் ஈடுபாடும் கொண்டவர். வைகானசம், பாஞ்சராத்ரம் என்ற இரு வைணவ ஆகமப் பிரிவுகளைப் போற்றியே எழுதுவது இவர்தம் பரந்த மனப்பான்மைக்கு எடுத்துக்காட்டு. அன்றியும் இவர் திருமாலடிக்கே பேரன்பு பூண்டொழுகும் பரம வைணவர். இவர் உளமுருகப் பாடிய பாடல்கள் ஆங்காங்கு எடுத்துக்காட்டப் பெற்றுள்ளன. ஆழ்வார்களையும் அவர்தம் பிரபந்தங்களையும் இவர் பெரிதும் போற்றியுரைப்பது இயல்பேயாகும். இராமாநுசரிடம் இவருக்கு ஈடுபாடு மிகுதி என்பதைச் சொல்ல வேண்டுவதில்லை.

இருப்பினும், பிற மத நிந்தை இவரிடம் எப்போதும் தலைகாட்டுவதில்லை. இவர் பாடிய இடங்களும் பல. இரண்டொன்றை ஈண்டு எடுத்துக் காட்டலாம். நூலின் முதற் செய்யுளே சிறப்புமிக்கது.

---

28 ஆராய்ச்சித் தொகுதி (1938) பக். 242 காண்க. மேலும் விளக்கம் வேண்டுவோர் இந்நூலாசிரியரின் பாண்டிநாட்டுத் திருப்பதிகள் (கழகம்) 4வது கட்டுரை - மதுரைக் கூடலழகர் (பக். 53-69) கண்டு தெளியலாம்.

*பொன்பூத்த புரிசடையும்*
*பூண்மணிப்பொன் நீண்முடியும்*
*மின்பூத்த ஒருபாலும்*
*திருமார்பும் வெண்ணீறும்*
*மன்பூத்த மான்பதமும்*
*மானிடமும் வளையுமணிந்து*
*அன்பூற்றி உலகங்களிக்கு*
*அவரேஎம் வினைதவிர்ப்பார்.*

என்பது காண்க. இங்கு ஆசிரியர் சங்கர நாராயண வடிவத்தைப் பேசுவது காணத்தக்கது. பின்னும் 'ஆற்றுப் படல'த்தில் முதற் பாடலில் நீலமிடற்றினரைக் குறிப்பிடுகின்றார். முதல் பாடலில் 'கோவிந்தன் தனைக் கூடலழகனை நாவின்பம் பெற நாம் பாடுதுமரோ' என்று கூறிவிட்டு அடுத்த பாடலில் நீலமிடற்றினரைப் பாடுகின்றார். ஒன்பதாம் பாடலில் கூறுகின்றார்.

*கண்ணன் கீர்த்தியும்*
*கண்ணுதல் கீர்த்தியும்*
*விண்ணின் மீனமும்*
*தேவரும் மேதினிக்*
*கெண்ண ரெண்ணும் என்*
*றிட்ட வரைகள் போல்*
*தண்ணெ னும்மலைத்*
*தாமரைகள் வீடுமால்.*

பெரியாழ்வார் வரலாற்றை இரண்டு பாடல்களால் பாடிய ஆசிரியர் பின்னும் பல இடங்களில் தமக்கு அவரிடமுள்ள ஈடுபாட்டைப் புலப்படுத்திக்கொண்டே செல்கின்றார். இவர் புலமை மிக்கவர். சந்தப் பாடல்கள் பாடுவதிலும் யமகம், திரிபு பாடுதலிலும் வல்லவர். சித்திர கவிகள் யாழ் முதலியவற்றைக் குறிப்பிடுவார்.

ஆசிரியர் வாழ்ந்த காலம் பக்தி மிகுந்த காலம். கால உணர்வு இல்லாத காலம். இன்றும்கூட அறிஞர்களிடையே வரலாற்றுணர்வு காணப்படுகின்றதில்லையல்லவா ? இறுதியில் இவர் பாடுவது:

*பதின்மர் பாடலுக்குமுன்*
*பதிக மாகவே*
*புதுவை யாசிரியனார்*
*புகல்பல் லாண்டுதான்*
*மதுரைமா நகர்தனிற்*
*பிறந்த வாய்மையால்*
*இதனை நேர்தலம்*
*நிலத்து இயம்ப வல்லமோ?*

**காலம்:** ஆசிரியரைக் குறித்த செய்திகள் கூறப் பெறாமை போலவே காலத்தைப் பற்றிய குறிப்போ, சிறப்புப் பாயிரமோ, அரங்கேற்றிய காலமோ சொல்லப் பெறவில்லை. இவர் ஆழ்வார் அனைவரையும் கூறுவதாலும், ஆசாரியருள் எம்பெருமானார் காலமாகிய 12-ஆம் நூற்றாண்டின் பிற்பாதிக்கும் பிற்பட்டவர் என்பது தெளிவு.

புராணத் திருமலை நாதர் மதுரையிலிருந்தே (கி.பி.1508), ஓரளவு அவரையும் புராணம் பாடியதையும் நேரில் அறிந்திருந்ததாலுமே கூடற்புராணத்தைத் தாம் முற்கூறியவாறு பாடினார் என்பது திரு. மு. அருணாசலம் அவர்களின் கருத்து. மேலும் இருவருக்கும் கால இடையீடு அதிகம் இருக்க முடியாது என்றும், சுமார் 50 அல்லது 75 ஆண்டுகளே இருந்திருக்கலாம் என்றும் அவர் கருதுவர். எனவே கூடற்புராணம் பாடிய காலம் 1575-1600க்குள் இருந்திருக்கும் என்று உறுதிப்படுத்துவர்.

16-ஆம் நூற்றாண்டு சைவத்திலும் வைணவத்திலும் புராணங்கள் மிக அதிகமாகத் தோன்றிய காலம். பொருளால் மட்டுமின்றி புராணத்தின் நடையாலும் இது பிந்திய நூலாக முடியாது. இந்த நூற்றாண்டுக்கே உரியதென்று கருதத் தோன்றுகின்றது.

**நூற்பொருள்:** இப்புராணம் பாயிரப் பகுதி, கிருத காண்டம், திரேத காண்டம், துவாபர காண்டம், கலி காண்டம் என்ற ஐந்து பகுதிகளாக உள்ளது. பிந்தைய நான்கும் யுகங்களின் பெயர்கள். பாடல் 757. பாயிரப் பகுதியுள் கடவுள் வணக்கம், புராண வரலாறு, ஆற்றுப் படலம், நாட்டுப் படலம், நகரப் படலம் என்ற பிரிவுகள் உள்ளன.

கடவுள் வணக்கப் பகுதியுள் திருமாலன்றி சேனைத் தலைவர், பெரிய திருவடி (கருடன்), சிறிய திருவடி (அநுமன்), ஐம்படைகள், பரமபாகவதர் வணங்கி, பெரியாழ்வாருக்கும் கோதைப் பிராட்டிக்கும் வணக்கம் கூறப்பெற்றுள்ளது. அதன்பின் ஆசிரியப் புத்தூரான் பல்லாண்டு பாடவந்த மல்லாண்ட தோழன் அடிபணிந்து தலத்துத் தாயாராகிய மதுரை வல்லி பதமும், நாவின் கிழத்தியும், பத்து அவதாரங்களும் வணங்கி பன்னிரு ஆழ்வார்களையும் வணங்குகின்றார். அதன் பின்னர் எம்பெருமானாரை வணங்கி, அண்டகோளத்தார் என்னும் பாடலைக் குறிப்பிட்டு பதின்மர் பாடலைத் தரித்தவருடைய தாளைப் போற்றுகின்றார்.

*அண்ட கோளத் தார்என்னும்*
*ஆரியத் தமிழ்என் றிங்கு*
*தண்டமிழ்ச் சங்கம் வென்ற*
*சடகோபர் தாமே சிற்பங்*
*கண்டதோர் வடிவாற் பேசத்*
*திரைப்புறத் திருந்த காலத்*
*துண்டெனப் பதின்மர் பாட*
*லுத்தரித் தவர்தாள் போற்றி*

'அண்டகோளத்தார் என்னும் ஆரியத்தமிழ்' என்று இங்குக் குறிப்பிட்டது பதினேழு அடிகொண்ட ஓர் ஆசிரியப்பா. இப்பாடலை மதுரைச் சங்கத்தாருக்கு நம்மாழ்வார் அனுப்பி பொருள் காணச் சொன்னார் என்றும், அவர்கள் பொருள் காணமாட்டாது விழித்தார்கள் என்றும் ஒரு கதை எழுந்தது. அக்கதையையே இப்பாடல் காட்டுகின்றது.

அவையடக்கம் 4 பாடல்களைக் கொண்டது. இங்கு மீண்டும் பெரியாழ்வார் பாசுரத்தைக் குறிப்பிடுவது காணத்தக்கது. பின்வரும் 'புராண வரலாறு' என்ற பகுதியில் 16 பாடல்கள் அடக்கம். இது நூலுக்குப் பதிகமாக அமைந்தது. ஒரு பாடலில் இப்புராணம் பிரம்மாண்ட புராணத்துள் 'கேத்திர மான்மிய காண்டத்தில்' 82-93 கதைகளாக 12 அத்தியாயங்கள் உள்ளன என்கின்றார்.

அடுத்தது ஆற்றுப்படலம். இந்நூல் சிறந்த காப்பியமாக ஆசிரியர் கருதிப் பாடினார் என்பதை உணர்த்தும்: திரிபு, யமகமாக 20 பாடல்கட்கு மேல் இங்கு உள்ளன. எடுத்துக்காட்டாகச் சில காட்டுவோம்.

*ஆகமாக வளாகங் கலக்குமே*
*யாகமாக வளாகங் கலக்குமே*
*நாக நாகமை நாகம் புரையுமே*
*நாக நாகமை நாகம் புரையுமே*

*காலை யேநிகர் போவதும் காலையே*
*மாலை யேஎன நாறலு மாலையே*
*சேலை யேறலை விந்தைதன் சேலையே*
*பாலை யேய்வன பாலை வனபாலையே.*

ஆறு என்பது இங்கு வையை. இது வேகவதி, வையை, கிருதமாலை எனும் பெயர்களைப் பெற்றது என்று ஆசிரியர் காட்டுவார்.

*வேக மாதலில் வேக வதியென்றும்*
*மாகம் வாய்ந்தத னால்வையை என்றும்தார்*
*ஆக லாற்கிருத மாலை யாம்என்றும்*
*நாகர் முப்பெயர் நாட்டும் நதியரோ.*

ன்பது பாடல்.

அடுத்தது **நாட்டுப் படலம்.** உம்பர்கோன் வாழி என்று உழவர் செந்நெல் வித்துகின்றனர். பயிர், தருமம், பாத்திரம் அறிந்து செய்தவர் குலம் தழைப்பதுபோல் கிளை தோன்றுகின்றது. நெற்களங்கள், பண்டு நான்முகன் பரப்பிய தளிகை யோதனங்கள் போல் விளங்குகின்றன. இப்பகுதியில் தமிழ் இலக்கணச் செய்திகள் பலவும், குறட் கருத்துகள் பலவும் நுவலப் பெற்றுள்ளன.

அடுத்தது **நகரப் படலம்.** இங்கும் பெருங்காப்பியம் போலவே சொல் தொடையும் பொருள் தொடையும் அமைய ஆசிரியர் பாடுகின்றார். நாக பாயலைப் போன்றது கூடல் மாநகரம். ஒரு சந்தப் பாடல்:

*தஞ்சையும் உறந்தையும்*
*கடங்கடற் கலிங்கமும்*
*வஞ்சியும் குடக்கொடே*
*வடக்குமவந் தெதிர்ப்பினும்*
*விஞ்சு காலி னாலுடைந்த*
*பஞ்சுபோலும் வெள்கணை*
*அஞ்சினா லுடைந்தபேதை*
*நெஞ்சுபோலு மாகுமே.*

என்பது. பாஞ்ச ராத்திரியரைச் சொல்லி அடுத்த பாடலில் 'கிழியறுத்த பட்டனார் குலத்துலோர் வைகானசர் வழிவழி தொடர்ச்சியாக வாழும் வீதி' என்கின்றார். பாடல்களின் வகையும், கழங்கு அம்மானைப் பந்தடியும்:

*ஒருமுறை கேட்ட பாட்டும்*
*எழுத்தொளித் தோது பாட்டும்*
*பொருள்நிலை கரந்த பாட்டும்*
*கணக்குமைந் தங்கப் போக்கும்*
*வருபல வினாவும் கூறி*
*மன்னரார் புகழும் வாணர்*
*தெரிவையர் கழங்கம் மானை*
*பந்தடித் தொகையும் தேர்வாம்.*

புலவோர் பூவாளத்தாற் பள்ளியுணர்த்துகிறார்கள். மக்கள் உண்ணீர் வம்மென்றெறி மணியொற்றி உணவூட்டுகிறார்கள்.

முதலாவது கிருத காண்டம். நைமிச முனிவர்கள் 'மதுரை மான்மியம்' கூறு என்று வியாழனை வினவுகிறார்கள். 'புலன்கள் அயல் போக்காது எண்ணி எழுதும் ஓவியம் போல் இருந்து கேண்மின்' என்று அவன் கூறுகின்றான். இங்கு பல இடங்களில் சொல்லமைப்பும், வாக்கிய அமைப்பும் வடமொழியமைப்பாக இருப்பதைக் காணலாம். எடுத்துக்காட்டு: 'நும்மால் நன்றாய்க் கேட்கப்பட்டேன் நான்; நோன்பாற்றும் உம்மால் இந்நூலை கேட்பதனுக்குண்டதிகாரம்'. இங்கு

இயற்கை வருணனை அதிகம். தென்றலானது குருகையின் மாறற்கு ஆம் இது எனும்படி குளிர்கின்றது. பாண்டி நாட்டில் இந்நகரில் ஈசனுக்கும் இமய மகளுக்கும் தாம் மணம் முடிப்பதற்காக வந்த செய்தியைத் திருமால் உணர்த்துகின்றார். திருமணம் நிகழ்கின்றது. காசிபன் சக்கர தீர்த்தக் கரையில் தவம் புரிகின்றான். நான்கு பாடல்களில் துதிக்கின்றான்.

பேரா யிரமோ பிரமமோ எவ்வெவைக்கும்

வேராய காரணமோ மேனித் தனிப்பொருளோ

பாரா யணமறைகள் பார்த்துணரும் தொல்லுருவோ

நாரா யணவோ நமோநமோஉன் னடிக்கே.

என்பது ஒரு பாடல். பின்னும் பல பாடல்கள் சமயப் பொருள்களை நுவல்கின்றன. காசிபனுக்கு மக்களும் அவர்களுக்கு எவ்வகையிலும் அலைவின்மையும் திருமால் அருளுகின்றார்.

**இரண்டாவது** திரேத காண்டம். பிருது சக்கரவர்த்தி பூசித்து வரம் பெறுகின்றான். அடுத்த 'கால நேமி வதைப் படல'த்தில், திருமால் அந்த அசுரனைத் தொலைத்த செய்தியைக் கூறும்போது சிறு போர் வருணனையும் காண்கின்றோம்.

**மூன்றாவது** துவாபர காண்டத்தில், முதலில் 'அத்திரிப் படலம்'; அதில் யானை மலைக் கதை. இம்மலையில் உரோமச முனிவன் முன் தோன்றிய நரசிங்கத்தின் உக்கிரம் தணியாமையால், தேவர் சரப மூர்த்தியை ஏவி உக்கிரம் தணிக்குமாறு செய்ய, நரசிங்கம் சரபத்தை வென்று பின் தானே சாந்தமடைந்தது. அடுத்தது 'அம்பரீடப் படலம்'; அம்பரீடன் மதுராபுரியில் வந்து திருமாலைப் பணிந்து முக்தி பெறுகிறான். இங்கு அவன் கண்ட நகர வருணனை 18 பாடல்கள்; புனல் விளையாட்டு 45 பாடல்கள்.

**நான்காவது** கலி காண்டம். முதலாவது 'உருவசி சாப நீங்கு படலம்.' தேவ சபையில் உருவசி சாபம்பெற்றுப் பூவுலகடைந்து புரூரவனை மணந்து வாழ்ந்து பின் சாபம் நீங்கித் தேவருலகடைதல். இரண்டாவது மலையத்துவசன் தவம் செய்து தடாதகைப் பிராட்டியைப் பெண்ணாகப் பெறுதல். பின் தடாகை அரசாள, மலையத்துவசன் முக்தி பெறுதல். மூன்றாவது சீவல்லப பாண்டியன் ஆட்சியால், செல்வ

நம்பியைப் பீடத்திருத்தி, பொற்கிழி தூக்கி, பெரும் பொருள் தத்துவத்தை உணர்ந்து வருபவருக்குக் கிழி வழங்குதல் எனத் திட்டமிடுதல். சீவில்லிபுத்தூர் பட்டாசாரியன் விண்டுசித்தன் மெய்ப்பொருள் உணர்தல் வேண்டி மதுரைக்கு வருதல். அந்த பட்டாசாரியன் மதுரையடைந்து பல்லாண்டு பாடி மெய்ப்பொருள் நிறுவிப் பொற்கிழி பெறுதல்[29], பல்லாண்டு கூறுமிடத்து, நூலாசிரியர் பட்டர்பிரான் கூற்றாக மூன்று பல்லாண்டு பாடல்களைப் பாடியுள்ளார். பின்வரும்,

*பல்லாண் டிலங்கு மணத்திண்தோள்*
*மாயா, தூய பரமேட்டி*
*தொல்லாண் டிருந்த குடியடியோம்*
*உன்னோடு யாமும், தொழுதொழும்பும்,*
*எல்லாந் தருமுன் திருவடிகள்*
*இரண்டும், பண்டை எமதுணர்வும்,*
*பல்லாண் டூழி பல்லாண்டு*
*பலகால் நூறா யிடத்தாண்டே.*

என்ற பாடல் அவற்றுள் ஒன்றாகும்.

## (5) இரு சமய விளக்கம்

திருமால் சமயத்தை உயர்த்திப் பேசும் இந்தப் பெருநூலைச் செய்தவர் **அரிதாசர்** என்ற புலவர். இவர் வரலாறும் பிற செய்திகளும் அறிவதற்கு ஆதாரங்கள் பல உள்ளன.

---

29 இந்த வரலாறு பெரியாழ்வார் வாழ்க்கையில் மாறி வழங்குகின்றது. இறையருளால் பாண்டித்தியம் பெற்று திருமாலே பரம்பொருள் என்று நிறுவி பொற்கிழி பெறுகின்றார். அரசன் அவரைப் பட்டத்து யானையின் மீது ஏற்றி நகரத்தில் பவனி வரச் செய்து பாராட்டை வழங்குகின்றான். இக்காட்சியைக் காண்பதற்காகத் திருமால் கருடன் மீதேறி பெரிய பிராட்டியுடன் காட்சி தருகின்றார். இக்காட்சியைக் கண்ணுறும் மக்களில் சிலர் கண்ணெச்சில் படும் என்று 'பல்லாண்டு' பாடியதாக (ஒரு பதிகம்) வரலாறு.

**ஆசிரியர்:** அரிதாசர் தொண்டை நாட்டில் குன்றவர்த்தனக் கோட்டத்தில் **அரிவாசபுரம், அரிகண்டபுரம்** என்ற பெயர்களால் வழங்குகின்ற **அரிதை** என்ற ஊரில் காராளர் மரபில் பிறந்தவர்.

*இந்துதவழ் பைம்பொழில்சூழ் வளமிக்க*
*அரிதைநகர் இறைவன் என்னும்*
*மந்தரபுயத்து அண்ணல் அரிதாசன்*
*அருள்சுரந்து வகுத்துச் செய்த*
*முந்தைஇரு சமயவிளக்கப் பெருநூல்*
*ஒருகவியை மொழிந்தோர் கற்றோர்*
*பைந்துளவப் பரஞ்சுடரின் அருட் பேற்றால்*
*இகபரமும் படைப்பர் மாதோ.*

என்ற நூற்பயன் கூறும் பாடலால் இதனை அறியலாம். இவ்வூர் இப்போது '**நாகலாபுரம்**' என்று வழங்குகின்றது. 'சந்திரகிரி இராச்சியத்து வேதகிரி தேசத்து ஹரிவாரபுரமான 'நாகலாதேவி அம்மன் புரம்' என்பது நாகலாபுரத்துக் கல்வெட்டு. வேதநதியாவது ஆரணி நதி (ஆரணம்-வேதம்). இவ்வூர் ஆரணியாற்றங்கரையில் உள்ளது. ஆரணியை வைத்தே ஆசிரியர் தம் நூலைத் தொடங்குகின்றார். இவ்வூரில் **காராளர்** மரபில் களப்பாள கோத்திரத்தில் பிறந்தவர். இவரே இதை 'அம்மாநகர் நீடு அரிவாசப் பெரும்பேர் இம்மாநிலத்தில் இம்மாநகர்க்கண்.... அரிதாசன் என்றோதும் நாம களப்பாளன்' (நகரப் படலம் 4,6) என்ற சொற்களால் குறிப்பிடுகின்றார். காராளர் மரபு என்பதை சோழ நாட்டு **நாச்சியார் கோயில்** என்ற **திருநறையூரில்** கி.பி. 1514ல் பொறிக்கப் பெற்றுள்ள கல்வெட்டானது இவருடைய தமையனாரை 'அரிகண்டபுரத்துக் காராளர் மரபினரான ஆவினி களப்பாளன் திருவேங்கடமுடையார் வடமலையண்ணகள்' என்று கூறுவதனாலும் நன்கு அறியலாம். அரிதாசருடைய தந்தையார் **திருவேங்கடமுடையார்** என்று அறிகின்றோம். திருவேங்கடமுடையார் சிறந்த திருமால் பக்தர். இவர் தமது மரபில் பிறந்த '**பெருமாள் முதலிச்சியார்**' என்ற அம்மையாரை மணந்து இல்வாழ்க்கை நடத்தி வந்தபோது இவருக்கு **வடமலையண்ணல், தெய்வங்கள் பெருமாள், திருமலையப்பர்**

என்ற புதல்வர் மூவர் பிறந்திருந்தனர். மூன்றாம் புதல்வரான **திருமலையப்பரே** பின்னால் **அரிதாசர்** என்ற புகழ்பெற்ற நூலாசிரியர். இவருக்குக் கிருட்டிணன் என்ற தாசியத் திருநாமமும் உண்டு. நாகலாபுரம் செப்பேடு ஒன்று இந்தப் பெயரைக் குறிப்பிட்டு, இவர் அவ்வூர்த் திருக்கோயில் கைங்கரியங்களைச் செய்து வந்ததால் **அரிதாசர்** என்று வழங்கப்பெற்றார் என்று கூறுகின்றது.

அக்காலத்தில் விசய நகரத்தின் சிறப்புமிக்க மன்னராய் விளங்கியவர் கிருட்டிண தேவராயர். அவர் கலிங்க தேசத்தைக் **கடகம்** (இன்றைய கட்டாக்) என்ற அதன் தலைநகரிலிருந்து ஆட்சி புரிந்த கசபதி அரசனான பிரதாப ருத்திரனை அடக்க வேண்டி அந்நாட்டின் மீது படையெடுத்துச் சென்று (1520) அவனை வென்று அங்கு செயத்தம்பம் நாட்டினார். நாட்டப்பெற்ற இடம் விசாகப்பட்டினத்தை அடுத்துள்ள **சிம்மாசலம்** என்று பெயர் வழங்குகின்ற **சிங்காத்திரி** ஆகும். கிருட்டிண தேவராயர் சிம்மாசலத்திடம் மிக்க ஈடுபாடு கொண்டவர். வெற்றி கொண்டு செயத்தம்பம் நாட்டிய இராயர் தெற்கு நோக்கி வந்தபோது **அரிதை** என்ற அரிகண்டபுரத்தில் அரிதாசரால் கட்டப்பெற்ற **கருமாணிக்கவண்ணர்-வேதவல்லி நாச்சியார்** ஆலயத்தையும் வணங்கி அங்கு ஆராதனைக்கு வேண்டிய நிபந்தங்களையும் கொடுத்தார்.

இராயரோ தெலுங்கு மொழியில் கவிஞர். அவர் பாடிய **ஆமுக்தமால்யதா**[30] என்ற நூலிலும் அவரது அவைக்கவிஞர் **பெத்தண்ணா** பாடிய காவியத்திலும் செயத்தம்பம் நாட்டிய ஊர் **பொட்டுனூர்** என்று சொல்லப் பெறுகின்றது. இதை இராயர் தில்லை நடராசப் பெருமானை வணங்கி அங்கு வடக்குக் கோபுரம் கட்டி வைத்தபோது பொறிக்கப்பெற்ற கல்வெட்டு உணர்த்துகின்றது. 'இந்த கோபுரம் இராசாதிராச பரமேசுவரன் ஸ்ரீ வீரப்பிரதாப கிருட்டிண தேவ மகாதர்மமாக சிம்மாத்திரி பொட்டுனூருக்கு எழுந்தருளிச்

30 சூடிக்கொடுத்தவள் வரலாறு. இது தெலுங்கில் கிருட்டிண தேவராயர் செய்தது. இதைப் பன்மொழிப்புலவர் மு.கு. ஜகந்நாத ராஜா அவர்கள் தமிழில் மொழிபெயர்த்து ஐதரபாத் தெலுங்குப் பல்கலைக் கழகம் வெளியிட்டுள்ளது. தெலுங்கு மூலமும் தமிழ் எழுத்தில் தரப் பெற்றுள்ளது.

செயத்தம்பம் நாட்டித் திரும்பிப் **பொன்னம்பல நாதனையும்** சேவித்து வடக்குக் கோபுரம் கட்டி வைத்த சேவை' என்று சிதம்பரசாசனம் கூறுகின்றது. இதனை அரிதாசரும் தமது நூலுள் ஒரு பாடலில் குறிப்பிடுவார்.

*கிரிபோல் விளங்கிக் கிளரும்புயக்*
*கிருட்டிண ராயர்*
*தரைமீது சிங்காத் திரியிற்சயத்*
*தம்பம் நாட்ட*
*வரமா தரவால் அளித்தேவட*
*கூவ மேவும்*
*கருமா மணிவண் ணனைநீடு*
*கருத்துள் வைப்பாம்*

என்பது காண்க. கிருட்டிண தேவராயரின் தாயார் திருநாமம் **நாகலாதேவி.** இவர் பெயரால்தான் பின்னர் இந்த அரிகண்டபுரம் என்ற ஊர் **நாகலாபுரம்** என மாற்றிப் பெயர் வழங்கலாயிற்று.

அரிதாசருடைய முன்னோர் புலமை மிக்கவர்கள். '**ஆற்றுவான்பாடி**' என்ற கிராமத்திலிருந்தவர்கள் என்பதை இராயர் காலத்தில் சகம் 1446 (கி.பி. 1523)இல் அமைந்த சாசனம் (ஆரணித் தாலூகா, தேவிகாபுரம்) குறிப்பிடுகின்றது. 'செயங்கொண்ட சோழ மண்டலத்துப் பல்குன்றங்கோட்டத்து மேல்குன்ற நாடு முருகமங்கலப் பற்று இராஜகம்பீரன் மலைக்கு அடுத்த செய்யாற்று பிரிவான தேவக்காபுரம் உடையார் திருநாமக்காணியான சோளபூண்டியில் தேவக்காபுரம் பிட்சாமடத்து விசுவேசுவர சிவாச்சாரியாரும் தான மயேசுவர கைக்கோள் முதலிகளும், ஆற்றுவான்பாடி வித்துவான்களில் திருவேங்கலநாதர் மகன் வடமலையார்க்கு இறையிலி காணியாச்சி பண்ணிக் கொடுத்தபடி' இத்திருவேங்கல நாதரே வடமலையாரின் தந்தை திருவேங்கடமுடையார் என்பது மு. இராகவையங்கார் குறிப்பு[31]. இதற்கு முந்திய ஆண்டில் (சகம் 1415) இராயர் நாகலாபுரத்தைச் சர்வமானியமாக அளித்தார் என்று ஒரு

31 சாசன தமிழ்க்கவி சரிதம் (1937) பக். 149.

கன்னடக் கல்வெட்டு கூறுகின்றது. 'சகாத்தம்' (1445)இல் சுபாநு வருடம், கார்த்திகை மாதம், திங்கட்கிழமை, சுக்கில பட்சம் உத்தானத்துவாதசியில் துக்கபத்ராதீரத்து ஹேதுகூட பர்வதத்தால் அலங்கரிக்கப்பட்ட ஸ்ரீவிட்டலேச விருபாட்சர் சந்நிதியில் ஹரிவாசபுரேசராய் வேதாசலத்தில் எழுந்தருளியிருக்கும் ஸ்ரீநீல மாணிக்கத் தேவருக்கு சந்திரகிரி இராச்சியத்தில் கங்கை மரபில் பிறந்தவரும், திருமாலின் திருவடிகளில் வண்டு போன்றவரும், நீலமாணிக்கத் தேவருக்குக் கைங்கர்யங்கள் புரிவதையே புருஷார்த்தமாகக் கொண்டவரும், அப்பெருமானுக்குக் கோபுர மண்டப விமான ஆவரணரதாதித் திருப்பணிகள் எல்லாம் செய்தவரும், வடமலை என்ற பெயருள்ள மந்திரி சிரேஷ்டரைத் தம் தமையனாராகக் கொண்டவரும், திருமால் பக்தரும் சிறந்தவருமான ஹரிதாசரால் கேட்டுக்கொள்ளப்பட்டுப் பெருமாளுக்குத் திருவமுதுக்கும் நிரந்தர கீத மகாவாத்யாதிகட்கும் நாகலாபுரம் என்ற பிரதி நாமங்கொண்ட அரிகண்டபுரம் சர்வமானியமாகக் கொடுக்கப்பட்டது.[32]

இக்கல்வெட்டு பல செய்திகளைத் தெரிவிப்பதோடு, வடமலை வேளாளர்குலம், அரிதாசர் தமையனார், இராயருக்கு மந்திரியாக இருந்தார் என்ற செய்திகளையும் தெரிவிக்கிறது. இவரை அரிதாசர், திருமால் வணக்கம் கூறும் பாட்டொன்றிலும் குறிப்பிடுகின்றார்.

*படமா சுணமும் முதிராஇளம்*
*பச்சை சூலும்*
*திடமா மறைகந் தமும்ஆகிநற்*
*செல்வன் ஆள*
*வடமா மலைஅண் ணனதுள்ளம்*
*வைக நாளும்*
*இடமாம் ஒருவற் கடியோங்களி*
*யாங்கள் தாமே.*

32 சாசன தமிழ்க் கவி சரிதம் - பக். 146.

என்பது காண்க. வடமலையார் அமைச்சராய் மிக்க செல்வாக்கோடு விளங்கினமையால், அக்காலத்தில் அரசர்மேல் ஆணையிட்டு மக்கள் சொல்வதுபோல இவர் பேராலும் ஆணையிட்டுச் சொல்லும் வழக்கம் இருந்தது என்பதைத் தத்துவப்பிரகாசர் வரலாற்றில் வரும் குறிப்பால் அறிகின்றோம்.

*மருவுபுகழ்க் கிட்ண மகராசர் ஆணை*
*அரிய வடமலையார் ஆணை - திருவாரூர்ப்*
*பாகற் கொடியறுப்பார் பாதத் திருவாணை,*
*தாயாக் கொடியிறக்கா தே*

என்ற பாடலைத் தத்துவப்பிரகாசர் பாடி திருவாரூர்ச் சிவாலயத்தில் நடந்த கேடுகளைக் கருத்தில் கொண்டு இப்பாடலில் குறிப்பிட்டவாறு மூன்று ஆணையுமிட்டு, கொடியிறக்காதவாறு தகைந்தார் என்பதைத் தமிழ் நாவலர் சரிதையால் அறிய முடிகிறது (225); பாகற்கொடியறுப்பார், தியாகராசப் பெருமான். திருக்கழுக்குன்றத்துச் சாசனமொன்றும் வடமலையாரைக் குறிப்பிடுவதோடு இவர்கள் பரம்பரையையும் கூறுகிறது. 'ஜெயங்கொண்ட சோழ மண்டலத்துக் குன்றுவர்த்தனக் கோட்டத்து வடகூவத்துள்ள அரிகண்டபுரத்து ஹரிவாசபுரமான நாகலாபுரம் என்ற ஊரினராகிய ஆவினி களப்பாளர் திருவேங்கடமுடையார் என்பவரின் புத்திரர்களை வடமலையண்ணகள், தெய்வங்கள் பெருமாள், திருமலையப்பர் என்ற மூவர் தங்கள் தாயார் பெருமாள் தேவிச்சியார் புண்ணியமாகவும் அரசர் கிருட்டிணதேவராயர் தர்மமாகவும், 'குறுமுகை' என்ற ஊரைக் கோயிலுக்கு உதவினர்' என்று கூறுகிறது. எனவே, இச்சாசனக் குறிப்புகளாலும், பாடல்களாலும் அரிதாசருடைய பரம்பரையும் வரலாறும் நன்கு தெளிவாகின்றன. இவர் சிறந்த வேளாளர் மரபில் வந்தவர் என்பதும், அரசியலில் பெரும் பதவி வகித்த வடமலையாரின் இளவல் என்பதும், கிருட்டிணதேவராயரால் பெரிதும் கௌரவிக்கப் பெற்றார் என்பதும் அறிய முடிகின்றது.

**இரு சமய விளக்கம்:** அரிதாசர் பாடிய நூல் 'இரு சமய விளக்கம்' எனப் பெயர் பெறும். சைவம், வைணவம் என்ற இரு சமயங்களையும் விளக்குவது என்று நூல் பெயர் குறிப்பிட்டபோதிலும்,

இது சைவ சமயக் கதைகளை மறுத்து வைணவத்தைச் சொல்லி வந்த நூலேயாகும். சைவ சமயக் கருத்து வேற்றுமைகளும் ஓரளவு சிறு சிறு பூசல்களும் அக்காலத்து இருந்தமை உண்மையே. 13-ஆம் நூற்றாண்டில் சிவஞான சித்தியார் செய்த அருணந்தி சிவாச்சாரியர் மற்றையோர் கருத்துகளை எடுத்துக் கூறி கண்டிக்கும் பகுதியாகிய '**பரபக்கம்**'[33] (பிற்பகுதி) என்ற பகுதியில் உலகாயதன் தொடங்கி நிரீச்சுர சாங்கியன் ஈறாகப் பதின்மூன்று சமயவாதிகளின் கருத்துகளை விளக்கமாக எடுத்துக்கூறி, சித்தாந்தபரமாக அவற்றுக்கு மறுதலை தெரிவிக்கின்றார். பதினான்காக பாஞ்சராத்திரி மதத்தை (வைணவத்தை)க் கூறும்போது, அவர் புராணக் கதைகளைக் கூறுகிறாரேயன்றி வைணவ சமயக் கருத்துகளை எடுத்துச் சொல்லி மறுக்கவில்லை. கி.பி. 1100க்குப் பின் வைணவ சமயம் மிகுதியான அளவில் வளர்ந்தது. பெருத்த மதமாற்றம் செய்தது; சமயத் துறையில் பெரு நூல்கள் யாவும் வடமொழியிலும் மணிப்பிரவாளத்திலும் செய்தது. செய்தோர் அனைவரும் (சிறு சிறு நூல்கள் செய்த ஓரிருவர் நீங்கலாக) பார்ப்பனரே. அவர்களுள் தமிழ்த்துறைக்கு வந்தவர்கள் இலர். 16-ஆம் நூற்றாண்டில் தோன்றிய **அரிதாசர்** குலத்தால் வேளாளர். திருமால் பக்தி நிறைந்தவர். சமயத் தத்துவமாக வடமொழியிலோ மணிப்பிரவாளத்திலோ நூல் செய்வதை விட்டு இவர் சைவர்களிடம் அதிகமாகப் பரவியிருந்த சிவஞான சித்தியார் பரபக்கத்தில் பாஞ்ச ராத்திரி மத மறுதலையாகக் கூறியவற்றை மனத்துட்கொண்டு சில புராணக் கருத்துகளையெல்லாம் மறுத்து, திருமால் பரமாக நூல் செய்ய முனைந்தார். பாஞ்சராத்திரி மதம், மறுதலை என்ற இரு பகுதிகளும் 731 பாடல்கள் கொண்டவை. இதனை மறுத்து, திருமால் சமயத்தைக் கதைகள் மூலம் நிலைநாட்ட எண்ணியவர் இதுபற்றி **இரண்டாயிரத்துக்கு அதிகமான** பாடல்களைப் பாடிவிட்டார்.

33 சுபக்கம் என்ற முற்பகுதி சைவ சமயத் தத்துவங்களை விளக்குவது.

தாம் இளமையில் சிறுவர்களோடே இணங்கித் திரிந்த காலத்தில் **வடிவழகியநம்பி**[34] என்ற குருவானவர் அன்போடு "வா, சிறு உறுதி விளம்புவோம். இது பொருள், மருள் தங்கிவிடாது உணர்தி'' என்று அழைத்து உறுதி கூறினார் என்றும், இவர் **வைணவ குலதுங்கர்** என்றும் கூறுகிறார். மேலும், **பெத்த பெருமாள்** என்ற மற்றொருவர், 'இவ்வடிவழகிய நம்பி, பொன் மலரடி பணிந்து நங்குருவாயடைந்து மிக மனமகிழ்ந்தே உயர்ந்தோன்'. பெத்த பெருமாள் என்னும் செல்வன் தம்மை வரவழைத்து இரு சமய நூல்களையும் சங்கையறத் தெரிவித்த ஆசான் - என்றும் கூறுகிறார். இவ்விருவரையும் குறித்த வரலாறுகள் அறியக்கூடவில்லை.

**நூல் அமைப்பு:** இது '**காண்டம்**' என்ற பெரும் பாகுபாட்டையும் '**படலம்**' என்ற அத்தியாயப் பிரிவையும், '**பரிச்சேதம்**' என்ற உட்பிரிவையும் கொண்டு அமைக்கப் பெற்றுள்ளது. இத்தகைய அமைப்பு பொதுவாகத் தமிழ் நூல்களில் இல்லை. இவர் வடமொழி நூல் அமைப்பைத் தழுவிச் செய்தார் போலும். பாயிர காண்டம், பூர்வ காண்டம், உத்தர காண்டம், வேத பரமார்த்த காண்டம் என்பன காண்டப் பாகுபாடுகள். படலங்கள் முறையே 9, 7, 46; பரிச்சேதம் பாயிர காண்டத்தில் இல்லை. மற்றவற்றுள் மொத்தம் 130. நூலுக்குப் புறம்பாகத் தொடக்கத்தில் 'தனியன்' என்ற தலைப்போடு 13 பாடல்கள் உள்ளன. இவற்றுள் முதல் மூன்று பாடல்கள் அரிதாசரைத் துதிப்பவை. அடுத்த எட்டுப் பாடல்கள் நூற்பயன்கூறி நூலைப் போற்றுபவை. இறுதி இரு பாடல்களும் 'பழிச்சினரைப் பரவல்' என்ற தலைப்பிட்டு வடிவழகிய நம்பியையும் பெத்தபெருமாள் என்பவரையும் போற்றுபவை.

பாயிர காண்டம் முழுமையுமே நூலுக்குத் தோற்றுவாயாக உள்ளது. முதல் கடவுள் வாழ்த்துப் படலம். எதிராசர், குருகூரன், சேனாதிபதி, வடகூவம், கருமாமணிவண்ணன் என்று துதி சொல்லுகிறது. வழக்கமாகச் சொல்லும் முறை திருமால் முதலாக

34 பிற்காலத்தில் 'வடிவழகிய நம்பிதாசர்' என்ற பெயருடைய ஒருவர் இருந்து ஆழ்வார் வரலாறுகளைச் செய்யுள் வடிவில் **குருபரம்பராப் பிரபாவம்** என்ற பெயரில் எழுதினார். இவண் குறிப்பிட்ட வடிவழகியநம்பி அவரினும் வேறானவர்.

எதிராசர் இறுதியாக, இவர் தலைகீழாகச் செப்புகின்றார். அரிதாசரின் துதிகளுள் ஒன்று:

*விரியோத நெடுங்கடல்சூழ் வியனுலகிற்*
*கமலவிழி மேக மேனிக்*
*கருதாத பகவனுல கெவ்வுயிரும்*
*படைத்தளித்துக் காக்குந் தன்மை*
*பிரிவேது மில்லாது பழமறைகள்*
*துணிபொருளைப் பேணிப் பேசும்*
*அரிதாசர் இருசரணம் என்றுசிரத்*
*துணிந்துதுயர் அகற்றி னேனே.*

என்பதாம்.

**நூற்பயன்:** இதுபற்றி ஒரு பாடல்;

*வளங்கெழு செல்வ முண்டாம்,*
*மனக்கருத் தெல்லாம் முற்றும்*
*களங்கமில் ஞானம் எய்தும்;*
*காட்சிசேர் முத்தி வாய்க்கும்;*
*தளங்கமழ் துளவக் கோலத்*
*தாரரி நாதன் வாக்கால்*
*விளங்கிரு சமய நூலின்*
*மெய்ப்பொருள் விளம்பு வார்க்கே.*

என்பது.

**பழிச்சினரைப் பரவல்:** இதுபற்றி இரண்டு பாடல்கள்:

*செதுமதிய ரிடும்புகூர் சிறியவரோ டிணங்கியே*
*திரிதருமெனை யன்பிலா சிலவுறுதி விளம்புகேன்*
*இதுபொருண் மருள்தங்கிடா தினிதுணர்தி யென்றுநீடு*
*இருசமய விளங்குநூல் எனதிதயம் அழுந்தவே*
*முதுகுருவடி வங்கொளா முறைதவறுதல் அன்றியே*
*முழுவுறவக ளங்கமாய் மொழிமுதன் மையன்எம்பிரான்*

*மதுகையிலும் சிங்கவேர் வயிணவாகுல துங்கனாம்*
*வழிவழங்கிய நம்பிசே வடியிணைகள் வணங்குவாம்.*

*சுந்தர மிலங்குபழ மறைகட்கு மாறாய்*
*சொல்லுமெழு நான்காகமம்*
*துன்மார்க்க மென்றுதெரி யாமற் புகழ்ந்திடுந்*
*துட்டர்கள்செய் செருவடங்க*
*வாதனைக் கருகன்மா லென்றுவெளி யிட்டாண்ட*
*வடிவழ கியான் நம்பிபொன்*
*மலரடி பணிந்துநங் குருவா யடைந்துமிக*
*மனமகிழ்ந்தே யுயர்ந்தோன்*

*சந்ததஞ் சிறியவர்க ளோடே யிணங்கித்*
*தலத்திற் பிரிந்தஎன்னைத்*
*தயையினா லேயழைத் திருசமய நூலினைச்*
*சங்கையற யோதியேநீ*
*சிந்தையி லினித்தெளிந் தேயறிந்தி டெனவுரை*
*செப்பியறி வித்தஆசான்*
*செயசமய சிங்கேறு பெத்தபெரு மாளெனும்*
*செல்வனடி போற்றுவோமே.*

என்பவையாகும்.

**நூற்பொருள்:** 'இரு சமய விளக்கம்' ஒரு விசித்திரமான பெருநூல். இதனுள் அரிதாசர் இரண்டு பெண்களை நதிக்கு அனுப்பி நீராடச் செய்கின்றார். அவர்கள் இருவரும் திருமால் அடியவளும் சிவன் அடியவளும் ஆவர். பெயர்கள் முறையே **ஆரணவல்லி, ஆகமவல்லி** என்பனவாகும்.

*செல்லும் திரளில் திருஆழியும்*
*சங்கும் மென்தோள்*
*புல்லும் குறியும்திரு நாமமும்*
*பொற்பு லாவும்*

வல்லன்ன கொங்கை வனமாலையும்
ஆக வாயில்
பல்லென்னு முல்லைகிரை கொண்டொரு
பாவை சென்றாள்.

இவள்தான் **ஆரணவல்லி;** திருமால் அடியவள்.

வில்லார் நுதலில் திரிபுண்டர
வெள்ளை நீறும்
அல்லார் குழல்மேல் அணிகொன்
றையும் அக்குமாலை
புல்லார் வளர்பொன் முலையும்
பொலிவாக இன்பச்
செல்லார் அமுதன் னவள்ஓர்தனித்
தோகை போனாள்.

இவள்தான் **ஆகமவல்லி;** சிவன் அடியவள்.

இம்மான் அனையார் இருவோர்களும்
மேலி யான்முன்
அம்மாள் அரனைப் புகழ்கின்றவர்
ஆக நாட்டும்
செம்மா தளைநேர் நகைஆர
ணச்செல்வ மாதும்
மைம்மா முகில்நேர் குழல்ஆகம
வல்லி ஆகும்.

இப்பாடலில் இருவரும் சொல்லப் பெறுகின்றனர்.

போகும்போது ஆரணி (வேதவதி) நதி தீர்த்தத்தில் நீராடிக் கரையேறி இருவரும் தங்கள் தங்கள் தெய்வத்தைத் துதிக்கின்றனர். **ஆகமவல்லி** 'நம முக்கணனே நமவே' என ஐந்து பாடல்கள் பாடுகின்றாள்.

*ஆல மரத்தை அடக்கிய வித்தென*
*அண்ட மெலாம் எளிதில்*
*சால அடக்கி அளிப்பவ னே,திகழ்*
*சந்திர சேகரனே*
*மால்அய னுக்கும் அனந்த மறைக்கும்*
*நல்வான வருக்குமெலாம்*
*மூலம் எனத்தகு காரண னே,நம*
*முக்கணனே நமவே.*

என்பது அவற்றுள் ஒன்று.

**ஆரணவல்லி,** 'அரியே பரிபூரண நமவே' என்று தானும் ஐந்து பாடல்கள் பாடுகின்றாள்.

*அந்தமும் ஆதியும் ஆகிய பேர்ஒளி*
*ஆம்உனை மாம றையால்*
*முந்துணர் வோர்சிலர் அல்லது*
*மாறுகொள் மோகன நூல்வழிநீ*
*தந்த பெருஞ்சம யங்களை யேபர*
*தத்து வம்என் றுணர*
*புத்தி மயக்கிடும் அச்சுத னே,பரி*
*பூர ணனே நமவே.*

என்பது அவற்றுள் ஒன்று.

அப்போது ஆகமவல்லி, 'நீ சொல்லியது புதுமையாயிருக்கிறது. எங்கள் தெய்வமே பழம் பொருள்' என்று சொல்ல, இருவரும் வாதம் செய்கின்றனர். அங்குள்ள யோகியர், அந்தணர், பாகவதர், பாசுபதத்தார் ஆகிய அனைவரையும் கூட்டி அவர்கள் முன் தங்கள் வாதங்களை வைக்கின்றனர். இதுவரையில் பாயிர காண்டம், பதிகம் என்று பிற நூல்கள் சொல்லும் பகுதியை இவர் 'விடயத்திறப் படலம்' என்று கூறுவார்.

**ஓரியல்பைக்** குறிப்பிடலாம். பெண்கள் இருவரும் ஒருவரையொருவர் விளிக்கும்போது அழகான தொடர்களைச்

சொல்லியே விளிக்கின்றனர். அரும்பிய கொங்கை நல்லாய், திங்கள் நேர் முகத்துச் சிவாகமவல்லிகேள், ஏலவார் குழலாகமப் பெண்ணே, கங்குநிறப் பொங்குகுழற் கலகவிழிச் சிலைநுதலாகமப் பூங்கோதாய், வாளொன்று கண்ணாரணவல்லி, அன்னநடையாய், பஞ்சழுத்து மெல்லடியாய், தாமஞ்சேர் கருங்குழலாய், இக்குமொழியாய், தாமமணியும் கருங்குழற் கோதாய், என்றுள்ள தொடர்களைக் கண்டு மகிழலாம்.

வேதம் 4, வேதாந்தம் 32, சாத்துவிக தர்மசாத்திரம் 6, இராசத தரும சாத்திரம் 6, தாமத தரும சாத்திரம் 6, உபபுராணம் 18, உபஸ்மிருதி 18, சங்கிதை 108, நூல் பாஞ்சராத்திரம் வைகானசம் என 2, இராகவ காதை, பாரத காதை, பரதம், வாகடம், சோதிடம், தரிசனம் 6, மதம் 6, சமயம் 6, சைவாகமம் 28, பிற சாத்திரங்கள் என நூற் பெயர்கள் இங்கு மிக விரிவாய்ச் சொல்லியிருப்பதைக் காணலாம்.

**இரண்டாம்** காண்டமாகிய பூர்வ காண்டம் என்பது ஏழு படலமுடையது. முதலாவது 'உலக வழக்கப் படல'த்தில் சைவ நாயன்மார் அறுபத்து மூவரானால் வைணவத்தில் ஆழ்வார் பதின்மருடன் எழுநூற்று எழுபதின்மர் உள்ளனர் என்கின்றாள். ஊரின் மேற்கில் திருமால் ஆலயம் இருப்பதை ஆகமவல்லி சுட்டிக்காட்ட அதற்கு மற்றவள் அநேக சிற்பசாத்திரச் சான்றுகளைக் காட்டி அரன் திருமால் கோயிலுக்குப் பரிவார தேவதை என்பதை அரிவாசபுரத்திலும் காணலாம் என்கிறாள். **இரண்டாம்** படலம் அண்ணாமலை ஆழிமலை என்று கூறுவர். **மூன்றாவது** சங்கரனுக்குப் பல முனிவர் சாபம் சூழ்ந்தது என்றும், **நான்காவது** தக்கன் யாக அழிவும், **ஐந்தாவது** சர்வசங்காரப் பொருள் அரியே என்றும் கூறுகின்றன. **ஆறாவது** 'வரபாலனப் படலம்' என்பது காசியைக் காபாலிக்குத் திருமால் கொடுத்தார் என்பது முதலான கதைகளைச் சொல்வது. **ஏழாவது** படலம் திருநீறு, உருத்திராக்கம், சிவபூசை முதலியவற்றின் சிறப்பை ஆகமவல்லி கூறுவதாக நிறைவு பெறுகின்றது.

**மூன்றாவது** உத்தர காண்டத்தின் இரு படலங்கள் மேற்கூறப் பெற்ற அனைத்தையும் மறுக்கின்றன. அடுத்த இரு படலங்களும் விஷ்ணு பூசையே பூசை என்று புகன்று சிவ பூசையைக் கண்டிக்கின்றன.

நான்காவது வேத பரமார்த்த காண்டம் என்பது. இதில் முதலில் பரமார்த்தப் பொருளை விரித்துக் கூறி அப்பொருள் திருமாலே என்று அறுதியிடுகின்றது. இரண்டாவது உபாசனை முழுமையும் திருமாலுக்கே உரியது என்கிறது. மூன்றாவது படைப்பு முழுவதும் திருமாலுக்கே உரியது என்று உரைக்கின்றது. சிவனுக்குப் பல பிறப்புகள் உள்ளன. திருமாலே பிறப்பிலி என்று முடிகிறது. நான்காவது காக்கின்ற திருவருள் திருமாலே என்றும், சர்வ அந்தர்யாமியும், காயத்திரிப் பொருளும் திருமாலே என்றும் சாற்றுகின்றது. ஐந்தாவது அனைத்து வேள்விகளுக்கும் தலைவன் முகுந்தனே என்று முடிக்கிறது. இறுதியான படலம் அனந்த வேதங்களும் நாராயணனே பரம் என்று சாதிப்பதைப் புகலவும், ஆகமவல்லி அம்முடிவுக்கு இசைவு தெரிவிக்கின்றாள் என்பதோடு நூலும் நிறைவு பெறுகின்றது.

உலகத்தில் வாதம் செய்வோரிடம் காணப்பெறும் இயல்புகள் இங்குக் காணப்பெறும். தனக்கு ஏற்றதெல்லாம் சரி, மற்றதெல்லாம் பிழை, அசத்தியம் என்று பிடிவாதம் பிடிப்பது உலக வழக்கு. அந்த வழக்கை இங்கும் காணலாம். வியாசர் காசிச் சேத்திரத்தில் தமது வலக்கையை நீட்டி, நாராயணனே பரம்பொருள் என்று முக்காலும் சத்தியம் என்று சாதித்தார். இதனைப் பிரமாண்ட புராணமும் பாரதமும் மற்றெல்லா நூல்களும் ஒருமனதாக ஒப்புக்கொள்கின்றன.

*வையகத் தெவரும் கண்டுதே றத்தன்*
*வலக்கையை வானுற நீட்டி*
*ஐயமற் றிடுசொ லாவது முக்கா*
*லாவதும் சத்தியம் இதுவே*
*மெய்யுரைச் சுருதி தன்னிலும் பெரிதாய்*
*விளங்குசாத் திரங்களும் இல்லை*
*செய்யகே சவனுக் கதிகமாய் நின்ற*
*தெய்வமும் இல்லையென் றிசைத்தார்.*

என்ற பாடலில் இதனைக் காணலாம். இதனைக் கேட்ட ஆகமவல்லி மெல்ல ஒரு சொல்லை மறுப்பாகச் சொன்னாள். 'அப்படி சொன்ன

வியாசருக்கு நீட்டிய கை மடங்காமல் நின்றதேன்?' இவ்வாறு கேட்டவுடனே ஆரணவல்லிக்குக் கோபம் அதிகமாய் வந்து விடுகின்றது.

'வேதமா மடந்தாய், அப்படிப் பகர்ந்த
வியாசருக்கு அவ்வியா சத்தால்
ஏத றும்புயத் தம்பளம் விளைந்ததென்
றுலகினில் உரைப்ப தேன்? என்னச்
சீதளக் குமுதச் செவ்விதழ் மேனித்
திலம்பதித் தெனக்கையும் சிறப்பக்
கோதறு சைவாகம மடந்தை யுடன்
குளிர்மறைக் கோமளம் கூறும்.

என்பதால் இதனைக் காணலாம். இத்தனையும் பொறாமையினால் சொல்லுவது; கைமடங்காமை சொல்லும் கதை அசாத்தியமே.

மங்குல்நேர் குழலாய், சிவசம யத்தோர்
மாச்சரி யத்தினாற் சூத
சங்கை யென்றோர் கற்பனா கதையைச்
சாற்றிய தன்மையே போல,
இங்கிது தனையும் பொறாமையி னாலே
இயம்புகின் றார்களத் தனையே,
அங்க தெப்படியே யென்னில், உன்மனமொப்
பாமெனும் படிவிளம் பக்கேள்:

மெய்ப்பொருள் மறைகொண் டரிபரத் துவம்நான்
விளம்பியே வருகையி னாலும்,
இப்பொருள் தனையே முன்னமே வியாதர்
இயம்பிய தாகையி னாலும்,
அப்பெயர் வியாதர் மறையெலாம் பிரித்து
ஆராய்ந்தவ ராகையி னாலும்,

*செப்பிய புயத்தும் பனமவ ரிடத்திற்*
*செறிந்ததே யெனல்அசத் தியமே.*

என்ற பாடல்களால் இதனைத் தெளியலாம். வாதங்களின் போக்குக்கு இஃது ஓர் எடுத்துக்காட்டு. இதையும் கூறுபவர் அரிதாசரே. தன் கட்சியொன்றே சரி, பிறர் என்ன சொன்னாலும் பிழை, அசத்தியம் என்பதே திருமாலடியாளான ஆரணவல்லியின் வாதம்.

இதுபற்றி அதிகம் விவரிக்க வேண்டிய இன்றியமையாமை இல்லை. இந்த 20-21ஆம் நூற்றாண்டுகளில் அமெரிக்க நாகரிகத்தின் மோதுதலால் சில விபரீதமான வாதங்கள் நிகழக் காண்கின்றோம். கும்பகர்ணன் பெரியவனா ? வீடணன் பெரியவனா ? பரதன் பெரியவனா ? இலக்குவன் பெரியவனா ? என்பன போன்ற வாதங்கள் எழுகின்றன. இவை யாவும் வீண் விதண்டாவாதங்களேயன்றி உண்மையான வாதங்கள் ஆகா. இவையொத்த இவ்விதண்டா வாதத்தைச் செய்கின்றார் அரிதாசர் என்றே நமக்குத் தோன்றுகின்றது. அருளாளர்கள் மன்பதை உய்யும் பொருட்டு அவ்வப்போது தோன்றி வருகின்ற சமயத் தத்துவங்கள் பற்றியோ அவர்களால் படைக்கப்பெற்ற கடவுளர்கள்பற்றியோ வாதங்கள் எழுப்புவது உசிதம் அன்று. இக்காலத்தில் நடைபெற்று வரும் விதண்டாவாதப் பட்டிமன்றத்தை 16-ஆம் நூற்றாண்டில் அரிதாசர் மிகவும் விரிவாக நடத்திக் காட்டுகின்றார் என்று கூறுவதோடு நாம் இதனை விட்டு விடுவோம்.

நூலில் சிறப்பாகச் சொல்லத்தக்கவாறு கவிதை அமைய வில்லை. பாடல்கள் தொட்ட இடம் எல்லாம் உரைநடையையொத்த 'வெள்ளைப் பாட்டாக'வே உள்ளன. கவிதைச் சிறப்பினை எங்கும் காண்பதற்கில்லை. இரண்டு எடுத்துக்காட்டுகள்: கண்ணனார் கயிலாய யாத்திரையில் துவாரகைக் காவலரை நோக்கி "திண்ணிய மற்புயமரபீர், திரும்பி நான்வருமளவும், திகிரிசங்கம் கண்ணின தோளினரை அல்லால் நகர்புகுதல் ஒழித்தீர்'' என நவின்றமாற்றம், மண்ணுலகில் பஞ்சம வேதப் பொருளாம். அரிவம்சம் அதனில் கூறும். ''என்னுடைய பக்தர்களுக்கு இருபுயத்தில் சங்காழி எழுதல் வேண்டும், அன்னிய தேவதைகள் தமது ஆலயத்தில் புகல்வாரை

அஞ்சலித்தல், பின்னர் அவர் தமைப் புகழ்தல், தவிர்த்திடலும் வேண்டும்'' எனப் பீதகவாடைப் பன்னக மாசயனத்தோன் பார்த்தனுக்குச் சொன்னது பாரதத்தில் கூறும்.' ஒரு பாட்டு இரண்டு பாட்டல்ல - நூல் முழுதும் பக்கம் பக்கமாக இப்படியே உள்ளது. பள்ளி மாணாக்கர்கள் கட்டுரைப் பயிற்சி போன்றது. மின்வெட்டு போன்ற கவிதைகள் மருந்துக்குக்கூட இங்கு காணப்படாது போயினும் ஆற்றொழுக்கு போன்ற நல்ல உரைநடையைக் காண்கின்றோம். ஆயினும் அரிதாசரின் நல்ல சமயத் தொண்டாக இது திகழ்கின்றது.

**காலம்:** அரிதாசர் காலம் கிருட்டிண தேவராயர் காலமே (1497-1540) என்பது அவர் சரித வரலாற்றால் நன்கு விளங்கும். இவர் தமையனாரான வடமலையண்ணனைக் குறிப்பிடும் சாசனங்கள் 1514, 1523 முதலான ஆண்டுகளில் எழுந்தன. தமையனை இவர் தம் நூலுள்ளும் குறிப்பிடுகின்றார். ஆதலால் இவர் காலம் இக்குறிப்புகளுக்குப் பொருத்தமானது (1500-25) என்று கொள்வது பொருந்தும்.

# பின்னிணைப்பு

## பயன்பட்ட நூல்கள்


அருணந்தி தேவநாயனார் — **சிவஞான சித்தியார்**

ஆழ்வார்கள் — **நாலாயிர திவ்விய பிரபந்தம்** (கி. வேங்கடசாமி ரெட்டியார் பதிப்பு) திருவேங்கடத்தான் திருமன்றம், 32, பெருமாள் முதலித் தெரு, இராயப்பேட்டை, சென்னை-600014.

இளங்கோ அடிகள் — **சிலப்பதிகாரம்** (ந.மு. வேங்கடசாமி நாட்டார் உரை) (மூன்றாம் பதிப்பு) மார்ச் 1950) - கழக வெளியீடு.

இராகவையங்கார் மு. — **ஆராய்ச்சித் தொகுதிகள்** பழநியப்பா பிரதர்ஸ் - தெப்பக்குளம், திருச்சி. சாசன தமிழ்க்கவி சரிதம் (1937)

கம்பர் — **கம்பராமாயணம் - பால காண்டம்** வை.மு.கோ பதிப்பு.

திருமூலர் — **திருமந்திரம்** - திருப்பனந்தாள் வெளியீடு, ஸ்ரீவைகுண்டம், நெல்லை மாவட்டம்.,

திருவள்ளுவர் — **திருக்குறள் - பரிமேலழகர் உரை** (கழக வெளியீடு, 1937)

மாணிக்கவாசகர் — **திருவாசகம்** (தருமையாதீன வெளியீடு)

மூவர் முதலிகள் (சம்பந்தர், அப்பர், சுந்தரமூர்த்தி நாயனார்) — **தேவாரம் அடங்கன் முறை** (மயிலைக் கிழார், இளவழகனார் பதிப்பு) (1953) திருவருளகம், 150, கோவிந்தப்ப நாயக்கன் தெரு, சென்னை-600 001.

ஜகந்நாத ராஜா, மு.கு. பன்மொழிப்புலவர் — **கிருட்டிண தேவராயரின் ஆமுக்த மால்யதா** (தெலுங்கு காவியம்) சூடிக் கொடுத்த சுடர்க்கொடி International Telugu Centre, Telugu University, Hyderabad-500 007.




First Paper: *என்ன ஆச்சரியம்?* "Enna Aacharyam !" [1949]

# ஓர் அறிமுகம்

பேராசிரியர்

## ந சுப்பு ரெட்டியார்




Books Published : **135 + 1**
Papers Published : **200** [Tamil 173 + English 27]
Endowments established: **10**
Endowment Lectures : **12**
Awards received: **8**
Prizes won : **14**
Titles conferred : **8**

## Masterpieces:

1) **Tamil Payitrum Murai [1957]**
2) **Religion & Philosophy of Naalayira Divyap-pirabhandham with special reference to Nammalwar [English][His PhD thesis ] [1977]**
3) **Kalvi Ulaviyal Kotpaadukal [1989]**
4) **Vainava Selvam [1995]**

## Financial Aid for publishing the Books:

a ) Tirumala Tirupathi Devasthanams - 21

b) Directorate of Tamil Development
Government of Tamil Nadu - 6

*Research on Professor's Books*

a) University of Madras - 1993 (leading to PhD)
b) Madurai Kamaraj University - 2017 (leading to PhD)



பேராசிரியரின் 135 நூல்களில், தெரிவு செய்யப்பெற்ற 100 நூல்கள் (முழுமையாக)
**http://tinyurl.com/nsr100collections**
எனும் இணையதளத்தில் உள்ளன. [freely downloadable]



# India
## Book of Records

# CERTIFICATE

## CENTENARY CELEBRATIONS OF PROF DR. N SUBBU REDDIAR

**Prof Dr S Ramalingam (born on 13 Oct 1949) Organizing Secretary, Na Subbu Reddiar 100 Educational Trust, Chennai, Tamil Nadu, has conceived, designed and meticulously executed 108 Centenary Events throughout Tamil Nadu during the Centenary Year (2015-2016) of Prof. Dr. N Subbu Reddiar who served the cause of education for 65 years andwritten 135 books in various fields (100 books after retirement).**



**Biswaroop Roy Chowdhury**
Chief Editor
**India Book of Records**

**Date: March 19, 2018**

*India Book of Records is registered with the Government of India with RNI no. HARENG/2010/32259.*

*India Book of Records is affiliated to Asia Book of Records and follows Asian Protocol of Records (APRs) as per the consensus arrived at the meeting of the Chief Editors of National Record Books, Ho Chi Minh City, Vietnam.*


ISBN 978-81-939685-4-3
9 788193 968543

